

சாதாரணப் பவுடர்களால் துலக்கும்போது
அலங்கோலமான கீறல்கள் விழக்கூடும்.

# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.

## இதன் துலக்கும் சக்தி 50% அதிகம்.

துலக்குவதற்கான வேறெந்தப் பவுடரையும் விட மிக அதிக அளவு டிட்டர்ஜெண்ட் அடங்கியது விம். ஆகவே தான், கூடுதலான துலக்கும் சக்தியோடு, பிசுக்குகளையும் கறைகளையும் அற்ப நொடியில் அகற்றுகிறது. பொடிக் கசடுகள் ஏதும் பின்தங்கும்படி விடுவதில்லை. மேலும், மிக மிக நைஸான பவுடராக இருப்பதால், கீறலே இல்லாத மழமழப்புக்கு உறுதி தருகிறது. தொட்டதை யெல்லாம் தூய்மை பளிச்சிடத் துலக்குவது விம்.







இந்தப் பேக் வாங்கினால் உமக்கு 25% க்கும் அதிகமாக மிச்சமாகும்.

இந்துஸ்தான் லீவரின் இத் தரமான தயாரிப்பு 600 கிராம் மற்றும் 2.5 கிலோ பேக்கிங்குகளில் கிடைக்கிறது. உதிரியாக ஒருபோதும் கிடைப்பதில்லை.



# கல்கி

1977
ஏப்ரல் 3
நள ௵
பங்குனி 21

## ராஜாஜி சிந்தனை

பலதரப்பட்டவர் ஒன்றுகூடி ஐக்கியப்பட்டு அழகான முறையில் கூட்டுறவான வாழ்க்கையை நடத்த முடியும் என்ற உண்மையை உலகத்துக்கு நிரூபிக்கக்கூடிய பொறுப்பு இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கிறது. சரித்திரத்தின் போக்கில் நம்பிக்கையுள்ளவர் இவ்விதம் நினைப்பார்களென்பதில் சந்தேகமில்லை. லட்சியத்தைச் சாதிப்பதில் சிரமங்கள் இருக்கலாம். அந்தச் சிரமம் எதில் இருக்கிறதோ அதைச் சாதிப்பது தான் உண்மையான சாதனையாகும். இடையூறுகளைக் கண்டு நாம் மனம் தளரக்கூடாது. விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளும் பந்தயக்காரர் இடையூறுகளைக் கண்டு மனம் தளர்வதில்லை. அந்த இடையூறுகளைச் சமாளிப்பதில் பன்மடங்கு ஊக்கத்துடன் வேலை செய்கின்றனர். அதுபோலவே நம் முயற்சியும் இருக்க வேண்டும்.

— ராஜாஜி மணிமொழிகள் நூலிலிருந்து

'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

# மாசில்லா அரசியல்

**க. சந்தானம்**

மகாத்மா காந்தி சமாதியின் முன் ராஜ்காட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனதா கட்சி, ஜனநாயக காங்கிரஸ், அகாலி தளம் மற்றும் இதர பார்லிமெண்ட் பிரதிநிதிகள், புனர் உத்தாரணம் செய்யப்பட்டுள்ள சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் காப்போம் என்று செய்துகொண்ட பிரதிக்ஞையைப் படிக்கும்போது மனசுக்கு மிகவும் உத்சாகமாக இருந்தது. ஜனதா கட்சியினரும், அத்துடன் இணைந்த கட்சிகளும் திரு மொரார்ஜி தேசாயைத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததும் மிகவும் திருப்தி அளிக்கிறது. திரு ஜக்ஜீவன் ராம் இத்தேர்தலில் கலந்து கொள்ளாதது சிறிது ஏமாற்றத்தை உண்டாக்கினாலும், புதிய பிரதமருக்குத் தமது கட்சியின் முழு ஆதரவைத் தருவதாக அவர் வாக்குறுதி அளித்திருக்கிறார். திரு மொரார்ஜி தேசாயின் தலைமையில் மந்திரி சபை அமைக்கப்பட்டதும், நாட்டு மக்கள் ''அப்பாடா'' என்று மன நிம்மதி அடைவார்கள். இந்த நிம்மதியில் ஜனநாயகத்தில் பற்றுள்ள உலக மக்கள் கூடப் பங்கு கொள்வார்கள்.

புது அரசாங்கத்தினிடமிருந்து பலப் பல உயர் சாதனைகளை மக்கள் எதிர்பார்ப்பார்கள். இதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆனால் எவ்வித நிர்ப்பந்தங்களுக்கிடையில் புதிய நிர்வாகம் இயங்க வேண்டியிருக்கும் என்பதையும் மக்கள் உணர வேண்டியது அவசியம். அரசியல் சட்டத் திருத்தங்களை மேற்கொள்ளுவதற்குக் காங்கிரஸ் எதிர்க் கட்சியினரின் ஆதரவும் இருந்தால்தான் முடியும். லோக சபையில் மூன்றில் இரண்டு பங்கு மெஜாரிடி புது அரசாங்கத்துக்கு இல்லை. ராஜ்ய சபையிலோ எண்ணிக்கை அளவில் மெஜாரிட்டி கூட இல்லை. மாநில அரசுகள் பெரும்பாலானவை எதிர்க் கட்சியான காங்கிரஸ் கட்சிகளின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டவை. ஆகையால், எந்தெந்த அம்சங்களை நிறைவேற்றக் கூடுமோ, எந்தெந்த இனங்களுக்குப் பார்லிமெண்டிலோ, மாநிலங்களிலோ எதிர்ப்பு இருக்காதோ, அத்தகைய அம்சங்களில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டும்.

மூன்று அம்சங்களில் புது அரசு தன் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. மாசில்லாத அரசியல்; திறமை மிக்க நடைமுறை நிர்வாகம்; இந்தியப் பொருளாதாரம் மேலும் வளர்ச்சியுறும் வகையில் விவேகத்துடன் அதை நிர்வகிப்பது — ஆகியவை இம் மூன்று அம்சங்கள். இங்கே இம்மூன்றில் முதலாவதான மாசில்லா அரசியலைப் பற்றியே எனது சிந்தனைகளை எழுதுகிறேன். ஏனெனில் மற்ற எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால் தூய்மையான அரசியல் தான் அவற்றுக்கு ஆதாரம்.

அரசியலில் தூய்மைக்கு மிகப் பெருந் தடையாக, முட்டுக்கட்டையாக இருப்பது அரசியல் கட்சிகள் கம்பெனிகளிடமிருந்தும், செல்வந்தர்களிடமிருந்தும் கட்சிக்காகப் பெருவாரியாகப் பணம் வசூலித்து எவ்விதக் கணக்கும் சொல்லாமல் அதைச் செலவழிப்பதுவே ஆகும். இப்போதுள்ள நிலைமையில் அரசியல் கட்சிகள் எந்த விதமான கணக்கும் சட்டப்படி வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. அதைத் தணிக்கையாளர்களைக் கொண்டு தணிக்கை செய்ய வேண்டிய நிர்ப்பந்தமும் இல்லை. எனவே, முதன் முதலாக இப்போது செய்ய வேண்டியது எல்லா அரசியல் கட்சிகளையும் அரசியல் குழுக்களையும், அரசியல் சம்பந்தமுள்ள தனி நபர்களையும் கட்டாயமாகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளும்படி சட்டம் செய்ய வேண்டும். விதிக்கப்பட்ட முறைகளில் அவர்கள் வரவு செலவுக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். உச்ச பட்சமாகச் சுமார் நூறு ரூபாய்க்கு மேல் வசூலிக்கும் பணம் ஒவ்வொன்றுக்கும் யார் யாரிடமிருந்து வசூலிக்கப்பட்டது என்று விவரம் சொல்ல வேண்டும். இம்மாதிரி ஒரு சட்டம் மேற்கு ஜெர்மனியில் அரசாங்கம் செய்திருக்கிறது. அமெரிக்காவில் அரசியல் கட்சிக்கோ,


**கல்கி** மலர் 36 இதழ் 36



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

அரசியல்வாதிக்கோ தனிப்பட்டவர்கள் கொடுக்கும் நன்கொடைக்கு உச்ச வரம்பு நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. கம்பெனிகள் அரசியல் கட்சிக்குப் பணம் கொடுப்பதற்கு முற்றிலும் தடையே விதிக்கப் பட்டிருக்கிறது. நம் நாட்டில் எல்லா அரசியல் கட்சிகளும் நடந்த லோக சபைத் தேர்தலில் அவர்கள் செய்த செலவுகளுக்குக் கணக்குக் காட்ட வேண்டும் என்று நிர்ப்பந்தம் இருந்து, முழு விவரமும் அறிவிக்கப்பட்டால், மக்களுக்கு அதிர்ச்சியே உண்டாகும் என்று எண்ண இடமிருக்கிறது.

இப்போது கம்பெனிகள் நேரிடையாக அரசியல் கட்சிகளுக்கும் அரசியல் வாதிகளுக்கும் நன்கொடை அளிப்பதில் தடை இருந்தாலும், பல விதங்களில் இந்தத் தடை மீறப்படுகிறது. எல்லோருக்கும் தெரிந்த ஒரு முறை, அரசியல் கட்சிகள் வெளியிடும் ''விசேஷ மலர்கள்'' (Souvenirs) இதற்கு விளம்பரக் கட்டண விகிதங்கள் மனம் போனபடி விதித்து, கம்பெனிகளிடம் மலர்களில் விளம்பரம் கோரிப் பணம் வசூலிப்பது சாதாரணமாக நடைபெறுகிறது. அரசியல் கட்சி மலர்களுக்குக் கொடுக்கப்படும் விளம்பரங்கள், மோட்டார்கள், பஸ்கள், கட்டணமில்லாமல் பெறுவது, மற்றும் இவை போன்ற மறைமுகமான உதவிகள் அளிப்பதையும் தடை செய்யச் சட்டத்தில் தேவையான திருத்தங்கள் செய்யப்பட வேண்டும். இவ்வித அரசியல் துராசாரங்களுக்கு ஒவ்வொரு கம்பெனியின் நிர்வாக டைரக்டரைத் தவிர, மானேஜர், கணக்காயர்களையும் பொறுப்பாக்க வேண்டும். கம்பெனி நன்கொடைகள் அடியோடு தவிர்க்கப் பட்டுவிட்டால், இந்திய அரசியலை மாசுபடுத்தும் பாதி ஊழல் ஒழியும்.

பணக்காரர்களிடமிருந்து ரசீது கொடுக்காமல் ரொக்கமாகப் பணம் வாங்கிக்கொள்ளும் கெட்ட பழக்கம் பல வேட்பாளர்களிடையே காணப்படுகிறது. இது தவிர்க்கப்படவேண்டும். நூறு ரூபாய்க்கு அதிகமாக, 'கிராஸ் செக்' மூலமன்றி, வேறு விதமாக ரொக்கமாகவோ, வேறு வகைச் செலவு வகையிலோ, அரசியல் கட்சிக்கோ, அரசியல் வாதிக்கோ பணம் கொடுக்கப்படுவதை சட்ட விரோதமாகவே செய்ய வேண்டும். அவ்வாறு கொடுக்கப்படும் எல்லாப் பணமும் கொடுப்பவர்களின் கணக்குகளில் பதிவு பெற்றிருத்தல் வேண்டும். ஆண்டுக்குப் பத்தாயிரத்துக்கு மேல் வருமானமுள்ள ஒவ்வொருவரும் தணிக்கை செய்யப்பட்ட தனது கணக்கில் அரசியல் கட்சிக்கு எவ்வளவு கொடுக்கப்பட்டது என்பதைத் தெளிவாகக் காட்டும்படி செய்ய வேண்டும். அரசியல் கட்சி, வேட்பாளர்கள் ஆகியோரின் தேர்தல் வரவு செலவு கணக்குகளையும் பரிசீலனை செய்யவும், தன்னால் நியமிக்கப்பட்ட தணிக்கையாளர்களைக் கொண்டு அவற்றைத் தணிக்கை செய்யவும் தேர்தல் கமிஷனுக்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டும். இவ்வாறு தணிக்கை செய்யப்பட்ட கணக்கு விவரங்களை ஆண்டுதோறும் புத்தக வடிவில் பிரசுரிக்க வேண்டும். லோக் சபை, மாநில சட்ட சபைகளுக்கு நடத்தப்படும் ஒவ்வொரு பொதுத் தேர்தலுக்குப் பிறகும், தேர்தல் நடந்த மூன்று மாதத்துக்குள் இம்மாதிரிப் புத்தகம் வெளிவர வேண்டும்.

நடைபெற்ற பொதுத் தேர்தலில் மக்களின் உணர்ச்சி வேகம் மேலோங்கி நின்றபோது, பண பலத்தின் ஆதிக்கம் அதிகமாக இல்லாதிருக்கலாம். ஆனால் இவ்வித உணர்ச்சி வேகம் இல்லாதபோது, பண பலம் வாக்காளர்களை மாசுபடுத்த உதவும். இப்போதும் பெரிய மாநிலங்களான உத்தரப் பிரதேசம், பீகார், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், ஹரியானா முதலிய இடங்களில் வாக்காளர்களால் அடியோடு நிராகரிக்கப்பட்டுப் படுதோல்வி அடைந்த காங்கிரஸ், ஏன் தென் மாநிலங்களான ஆந்திரா, கர்நாடகம், பெரும்பான்மையாகத் தமிழ்நாடு, கேரளத்திலும் வாக்காளர்களின் ஆதரவைப் பெற்று வெற்றி பெற்றது என்பது குறித்துப் பல்வேறு ஹேஷ்யங்கள் இருக்கின்றன. இதற்கு ஒரு காரணம் எனக்குத் தோன்றுகிறது. அவசர நிலை அக்கிரமங்களினால் அதிகமாகப் பாதிக்கப்படாததால், உணர்ச்சி வேகம் மேலோங்கி இராத தென் மாநிலங்களில், காங்கிரஸ் கட்சிக்கும், அத்துடன் இணைந்த கட்சிகளுக்கும் இந்தப் பண வசதி வெற்றிக்கு ஒரு முக்கிய காரணமாக இருக்கலாம். நான்கு தென் மாநிலங்களில் போட்டியிட்டு வெற்றி பெற்ற காங்கிரஸ் வேட்பாளர்கள் தேர்தலில் எவ்வளவு பணம் செலவழித்தனர் என்று தெரிந்தால் நன்றாக இருக்கும். ஆனால் இந்த விவரம் முழுவதும் கிடைக்காது. அரசியல் அலைகளில் வேறு இதர போக்குகளும் காங்கிரஸ் வெற்றிக்குக் காரணமாக இருக்கலாம். ஆனாலும் தென் மாநிலங்கள் சம்பந்தப்பட்ட வரையில் பண பலம் வெற்றிக்குப் பெரும் பங்கு வகித்தது என்று எண்ணப் போதிய காரணங்கள் இருக்கின்றன. இத்தகைய முறைகேடான, பண பல ஆதிக்கத்தைத் தடுக்கவும், அரசியல் கட்சிகளின் வரவு செலவுகளை ஒழுங்கு படுத்திச் சீராக்கவும் நடவடிக்கை எடுக்க வேண்டியது, மாசில்லா அரசியலுக்குத் தேவைப்படும் முக்கியமான நடவடிக்கையாகும். எல்லா பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கும் மாநில சட்ட சபை அங்கத்தினர்களுக்கும் உயர்ந்த நெறி முறை இருக்க வேண்டியதும் அவசியம். இத்தகைய நெறிமுறையில் இடம்பெற வேண்டிய அம்சங்களை நான் முன்னொரு சமயம் விரிவாகச் சொல்லியிருக்கிறேன்.

---

தயிர் புளித்த நாற்றம் வீசாமலிருக்கவும், தயிர் கெடாமல் இருக்கவும், தயிர் கிண்ணத்தில் சிறிதளவு விளாம்பழத்தைப் போட்டு வைக்கவும். இரண்டு மூன்று நாட்கள் வரை தயிர் கெடாமல் இருப்பதுடன், மணமுடனும் இருக்கும்.

-மூலிகை மணியில் படித்துப் பயன் கண்டவர்:
-குமாரி மோகனா




பகைவனுக்கருள்வாய்
நன்னெஞ்சே!
ஜெயப்ரகாஷ் நாராயணன்
இந்திரா காந்தி இல்லத்துக்-
குச் சென்று அவரைச்
சந்தித்தார்!


உங்கள் அடிமடியில்
நாம்காளி புத்திரம்!
வேண்டாம் இந்த விளையாட்டு....
பிரதமர் மொரார்ஜி
மாநில காங்கிரஸ் அரசுகள்
உள் பூசல்


ஷேக் அப்துல்லா மந்திரி சபைக்குக் காங்கிரஸ் அளித்து வந்த ஆதரவை
வாபஸ் பெறுகிறது!

# பப்பு ஃபீடரின் தரச்சிறப்பிற்குத் தக்க சான்று— உங்கள் கண் முன்னே!




• முன் உபயோகப்படுத்தப் படாத, தனிப்பட்ட மூலப் பொருளால் ஆன மூடி. அடிக்கடி கொதிக்க வைத்தாலும் கெடாது. துர்நாற்றம் வீசாது.

• புத்தம்புதிய ரப்பரால் ஆன, தனிப்பட்ட வடிவமைப்பு கொண்ட நிப்பிள் தங்கு— தடையின்றி பால் பாய்ந்து வருகிறது.



• அத்துடன் நிப்பிள் உறை இலவசம். சுகாதாரத்திற்கு ஆதாரம்.




• தரமுயர்ந்த கண்ணாடியில் தயாரானது—அதிக உழைப்பாற்றல், சுத்தம் மற்றும் சுகாதாரம்.

• நிர்ணயிக்கப்– பட்ட ஊட்ட அளவு: 225 மி.லி. (8 அவுன்ஸ்), வேறு சில ஃபீடர்களைப் போல் 200 மி.லி. (7 அவுன்ஸ்) அல்ல.



துடிப்பான குழந்தைப் பருவத்தின் இனிய துணை

**பப்பு**

ஃபீடர் மற்றும் நிப்பிள்

U-P-8 TM

# "ஆறுகால்" ஸ்தோத்திரம்

13

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்



கம்போடியா தேசத்தில் கிடைத்த கல்வெட்டிலே ஆசார்யாளை ''பகவத் சங்கரர்'' என்று சொல்லியிருக்கிறது. நம் தேசத்தில் அவரை 'பகவத் பாதர்' என்றுதான் சொல்கிறோம் என்றால் கம்போடியாக்காரர்கள் இன்னம் ஒரு படி உயர்த்தி 'பகவான்' என்றே அவரைச் சொல்லியிருக்கிறார்கள். அந்தச் சுலோகத்திலே ஆசார்யாளின் பாதத்தைத் தாமரையாகச் சொல்லியிருக்கிறது. ''அங்க்ரி பங்கஜம்'' என்று சொல்லியிருக்கிறது. இந்தப் பாத தாமரையை விட்டு அசையமாட்டோம் என்று லோகத்தில் ஒரு வித்வான் கூடப் பாக்கியில்லாமல் ('நிச் சேஷமாக' என்று சுலோகத்தில் இருக்கிறது) தங்கள் தலைகளை இதிலேயே தாழ்த்திக் கிடக்கிறார்களாம். 'ஸகல வித்வத் ஜனங்களின் சிரஸுகளாகிற வண்டுகளால் மொய்க்கப்பட்ட பத்ம பாதத்தை உடைய பகவான் சங்கரர்' என்று அந்தக் கல்வெட்டில் இருக்கிறது.

முதலில் நான் சொன்ன சுலோகம் 'பத்ம பாதர்' நம் பகவத் பாதரைப் பற்றிப் பண்ணினது. இங்கே பகவத் பாதாளின் பாதத்தையோ முகத்தையோ பத்மமாகச் சொல்லாமல் பாஷ்யத்தை அப்படிச் சொல்லியிருக்கிறது. பாஷ்யத் தாமரையிலிருந்து ஊறும் அத்வைதத் தேனைப் பருகுகிறார்களாம் அவருடைய சிஷ்யர்களான வண்டுகள். இங்கே 'சிஷ்யர்கள்' என்று சொல்வதற்கு சுலோகத்தில் 'விநீத விநேய ப்ருங்கா:' என்று வருகிறது.

'விநீத' என்றால் நல்லொழுக்கத்தில் பழக்கப்பட்டவர்கள் ( Well Trained ) என்று அர்த்தம். 'ப்ருங்கா:' — என்றால் வண்டுக் கூட்டம். 'சிஷ்யன்' என்பதற்கு 'விநேயன்' என்று போட்டிருக்கிறார்.

நம் ஆசார்யாளிடம் ஆச்சரியம் என்னவென்றால் அவருடைய சிஷ்யர்கள் விநயமுள்ள விநேயர்களாக இருந்தது மட்டுமில்லை. ஜகத்குருவான அவரே எல்லோரையும் விட விநயம் உள்ளவராக இருந்தார்.

ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி' என்று செய்திருப்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கும். கவித்வம், பாஷை அழகு, தத்வச் சிறப்பு, மந்திர சாஸ்திர விஷயங்கள், உவமை முதலான அணிகள் அத்தனையும் ஈடிணை இல்லாமல் சேர்ந்திருக்கிற பரம உத்கிருஷ்டமான ஸ்தோத்திரம் அது. அதோடு கூட அதற்கே அபாரமான மந்திர சக்தியும் இருக்கிறது. இப்பேர்ப்பட்ட ஒரு கிரந்தத்தைப் பண்ணினவருக்கு எவ்வளவு தற்பெருமை ஏற்பட்டாலும் அது நியாயம்தான். ஆனால் நம் ஆசாரியாளுக்கோ லவலேசமாவது இப்படிப்பட்ட தற்பெருமை — நாம் பெரியதாக ஒன்றைச் சாதித்து விட்டோம் என்ற அகம்பாவம் — இருந்ததா? இல்லவே இல்லை. ''ஸௌந்தரிய லஹரி'' முடிவிலே அவர் விநயமே வடிவாக மன்னிப்புக் கேட்கிற பாவனையில் அம்பாளிடம் சொல்கிறார்: ''அம்மா! சப்த சமுத்திரமாக, வாக் சமுத்திரமாக இருக்கப்பட்ட உன்னைப் பற்றி ஏதோ இந்த நூறே நூறு சுலோகம் பண்ணி உன்னை வர்ணிக்க நான் முயற்சி செய்திருக்கிறேனே! இது எப்படித் தெரியுமா இருக்கிறது? ராமேச்வரத்திலே, ஸேது தீர்த்தத்திலே பக்தர்கள் ஸமுத்திர பூஜை பண்ணுகிறபோது அந்த மகா சமுத்திரத்திலிருந்தே ஒரு கை ஜலத்தை அள்ளி அதற்கே அபிஷேகம் செய்வதாக ஓர் உபசாரம் செய்கிறார்களே, அந்த மாதிரிதான் இருக்கிறது'' என்கிறார். இதேபோல் பரம பவ்யமாக இன்னும் மூன்று உதாரணமும் கொடுக்கிறார்.

இப்படிப் பரமேச்வராவதாரமாக இருந்த போதிலும் விநயமே வடிவமாக இருந்த ஆசாரியாள்தான், ஒரு சக்தியும் இல்லாமலே அடக்கமில்லாமல் திரிகிற நம்மோடு சேர்ந்து நின்றுகொண்டு நமக்குப் பிரார்த்திக்கச் சொல்லிக் கொடுப்பதற்காகவே 'அவிநயம் அபநய'' (''என் விநயமின்மையைப் போக்குவாய்!'') என்று ஷட்பதீ சுலோகத்தை ஆரம்பிக்கிறார்.

அடக்கம் ஒன்று வந்து விட்டால் போதும். பாக்கி எல்லா நல்ல குணங்களும் அதன் பின்னே தானாக வந்து விடும். ''அடக்கம் அமரருள் உய்க்கும்'' என்று திருவள்ளுவர் கூடச் சொல்லியிருக்கிறார்.

பள்ளிப் பருவத்திலேயே விநயத்தில் பழக்கிவிட வேண்டும். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது. வயசு ஏறிப் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டு, யௌவனம், பதவி, பணம், பலம் என்று தேடிக்கொள்கிறபோது, விநயம் வருவது ரொம்பக் கஷ்டம். ஆனதால் சின்ன வயசிலேயே இதில் பழக்கிவிட வேண்டும். மாணாக்கன் என்று சொல்லப்படுகிறவனுக்கு 'விநேயன்' என்றே ஆதி நாளில் பேர் வைத்திருந்தது இந்தத் தத்துவத்தைத்தான் காட்டுகிறது.

(தொடரும்

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]




'மூன்று பங்கு நீரும் ஒரு பங்கு நிலமும் படைத்த இந்தப் புவியிலே நல்ல குடிதண்ணீருக்காக மனிதன் வானத்தைப் பார்க்க வேண்டியிருக்கிறதே, ஏன்?'

ஆழிசூழ் இவ்வுலகைப் பார்த்து என் மனத்தில் இந்தக் கேள்வி எழவில்லை. புவனேசுவரம் போகும் பாதையிலே பரந்து விரிந்து அற்புதக் காட்சி சமைத்துக் கொண்டிருந்த சில்கா ஏரியைப் பார்த்தபொழுது எழுந்தது.

இந்த ஏரி கடல் நீரைக் குடிப்பதனால் இதன் நீர் உப்புக் கரிக்கும். என்றாலும் இடையிடையே குன்றங்களையும் திட்டுத் தீவுகளையும் கொண்ட இதன் எழில்மிகு தோற்றம், கதிரவனின் பொற்கிரணங்கள் பாயும் பொழுது பொன்னலைகளை எழுப்பிப் பார்ப்பவர்களின் உள்ளத்தில் இன்பப் பரவசத்தை ஏற்படுத்தும். 'எத்தனை இன்பம் வைத்தாய் இறைவா?' என்று இது ஒன்றைப் பார்த்தே கேட்கத் தூண்டும்.



'ஏன் அப்பா! சில்கா ஏரியின் அழகிலே மெய் மறந்து ஓரிஜினல் கேள்வியைக் கோட்டை விட்டு விட்டாயே!' என்று பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது. பின்னால் போனது 'பர்ஹம் புர்' என்னும் பிரும்மபுரி படைத்த பிரம்மனை அது இனம் காட்டிக் கொடுத்தாற் போலிருந்தது!



உத்கலப் பகுதியில் நுழையும்போது இறையுணர்வில் திளைத்து மீள்வோமானால், நம் வண்டி நிற்கும் இடம் 'நிராகார்பூர்' ரயில் நிலையமாயிருக்கலாம். அருவே உருவானவன் ஆண்டவன் என்று கூறுகிறதோ இவ்வூர்?

'அலகிலா விளையாட்டு உடைய அவன் ஒன்றுமே தெரியாத பரப்பிரும்மமாக இருந்து கொண்டு எல்லாம் தெரிந்தவனாக எப்படிக்



கண்ணாமூச்சி விளையாடுகிறான்? அவனை விடக் கூடாது. எப்படியும் பிடித்தே ஆகவேண்டும்!' என்று மாணிக்கவாசகரைப் பின்பற்றி 'ஒரு நாமம் ஒருருவம் இல்லாதவனுக்கு ஆயிரம் நாமம் சூட்டி ஆயிரமாயிரம் உருவம் தீட்டி மகிழ விரும்பினால், 'உனக்கு எதற்கு வீண் சிரமம்? என்னை வந்து பார்!' என்று அழைக்கிறது புவனேசுவரம். இங்கே ஒரு காலத்தில் ஆயிரம் பெரும் பெரும் கோயில்களே இருந்திருக்கின்றன. உலகத்துக்கு இறைவன் இங்கிருப்பதாக ஐதிகம் —அதுவே புவனேசுவரம்.

முன்னைப் பழைமைக்கும் பழைமையாக, பின்னைப் புதுமைக்கும் புதுமையாகப் புவனேசுவரம் இன்று இரண்டு பட்டிருக்கிறது. பழைய புவனேசுவரம், புதிய புவனேசுவரம் என்று! ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் தலைநகரம் கட்டக்கிலிருந்து மாறியதால் இங்கே ஒரு புது நகரமே உருவாகியிருக்கிறது. இந்தப் புது நகரத்துக்குப் புதிதாகப் போகிறவர்களுக்கு, இது போன்ற புதிய நகரங்களுக்குப் போகிறவர்களுக்கு எத்தனை எத்தனை தொல்லைகள் உண்டோ, அத்தனையும் உண்டு. ஒன்று போலத் தெருக்கள், ஒன்றுபோல் வீடுகள்! போய்ப் பழகியவர்களுக்கு இந்தத் தொல்லைகள் எல்லாம் அத்துபடி.

பழைய புவனேசுவரத்தில் இருக்கும் பல கோவில்களும் ஸ்ரீ காஞ்சி, கும்பகோணம் போன்று ஊருக்குள்ளேயே 'ஜே. ஜே' என்று இல்லை. அத்துவானமான பாதைகளில் ஒரு மைல், இரண்டு மைல் என்று சுற்றிப் பார்த்து வரவேண்டியிருக்கிறது. என்றாலும் உத்கலக் கலையின் சிகரமாகத் திகழ்கின்றன.

1. சிற்பத்தில் ஆரணங்கு
2. லிங்கராஜர் ஆலயம்
3. பிந்துசாகர்
4. தௌலியில் சாந்தி தூபம்





பிந்துசாகர் என்று ஒரு குளம் — சிறு துளி பெரு வெள்ளம் என்ற பழமொழியை நினைவுபடுத்துகிறாற்போல்! இதில் பாரதத்தின் பல்வேறு புண்ணிய நதிகள், நீர் நிலைகள் ஆகியவற்றின் நீர் துளிதுளியாகச் சேமிக்கப்பட்டுத் தூய்மை பெற்றிருப்பதாகக் கூறுகிறார்கள். துளிக் கடல் என்ற பெயர்ப் பொருத்தத்தோடு திகழும் பிந்து சாகரைச் சுற்றியே கோவில்கள் அமைந்துள்ளன. ஸ்ரீ காமாட்சியின் அருட் பார்வையில் காஞ்சீபுரம் கோவில்கள் திகழ்வது போல! கும்பகோணம் மகாமகக் குளத்தின் பெருமையை நினைவுபடுத்துவது போல!

உடலைக் கோவிலாகவும் உயிரைத் தெய்வமாகவும் கொண்டு வழிபடும் நமது பாரதியப் பண்பாட்டுக்கு உலகத்தையே கோவிலாகக் கொண்டு உயிரினங்கள் அனைத்தையும் பரம் பொருளாகக் கொண்டு வழிபடுவதும் உடன்பாடு. இவற்றுக்கு இடைப்பட்ட வழிபாடே கோவில் வழிபாடு. மனிதன் எத்தனைதான் அரிய கற்பனைகளில் ஊறிச் சிறந்த கலைஞனாகி விட்டாலும் மண்ணைத் தொட்டவண்ணமே விண்ணைக் காண்கிறான்.

இறையுணர்வைப் பெருக்கும் கோவில்கள் அவன் கற்பனைக்கு ஓர் உருவகம். உடலுக்கு அடிமைப்பட்ட மனிதன் ஆசாபாசங்களுக்கு, காமக் குரோதங்களுக்கு ஆளாக நேர்கிறதல்லவா? அவற்றில் அடிபட்டுத் தேறிய பின் மனம் எப்படிப் பரிபக்குவம் அடைகிறது? இவற்றைச் சித்திரிப்பதாக வெளிக் கோபுரங்கள் அமைந்துள்ளன. இவற்றில் பிறந்த மேனிச் சிற்பங்களும் சிருங்கார லீலைகளும் கோலம் காட்டுகின்றன. இவற்றிலிருந்து மீண்ட பின்னரே இறைவனை நெருங்க முடியும் என்பதைக் குறிப்பால் காட்டும் கோவில்கள் இங்கு ஏராளம்.

அவற்றில் 'சிறந்தவை' என்று போற்றப் படுபவை வெகு சில. அவற்றைப் பார்த்தாலே மற்றவற்றைப் பார்த்தாற்போலத்தான். காலக் கிரமப்படி இன்று நிற்பவை பரதேசுவரர், லக்ஷ்மணேசுவரர், சத்ருக்னேசுவரர் ஆகிய ஆலயங்கள் ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்தவை. ஏழாம் நூற்றாண்டை நினைவுபடுத்திக் கொண்டு நிற்பது பரசுராமேசுவரர் ஆலயம். இதன் மேலவாசலில் யானை பிடிக்கும் தத்ரூபமான காட்சியைக் காணலாம். எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது 'வைதால் தேவுல்' என்னும் வேதாளக் கோவில். பெயருக்கேற்ப முறை-துறை இல்லாமல் இரண்டு அடுக்குக் கோபுரமாக எழுப்பப் பட்டிருக்கிறது என்றாலும் பார்ப்போரைப் பிரமிக்க வைப்பதாக இருக்கிறது.

எட்டாம் — ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த முக்தேசுவரர் ஆலயம் சிற்பச் சிறப்பு மிக்கது. அணி-பணி செய்துகொள்ளும் மாதர்கள், அவர்களது அங்க லாவண்யங்கள், பயந்தோடும் மான்கள், குரங்குகளின் நகையாடல் ஆகிய சிற்பங்கள் பார்க்கச் சிறந்தவை. இவை பொற பொறவென்றிருக்கும் மணற் கல்லாலானவை. முக்தேச

ரா.வீழிநாதன்



**மூன்று புதிர்கள்!**

★ இதில் ஒரு பகுதியை வெட்டி இன்னொரு பக்கம் ஒட்ட வைத்தால் 'இதய' வடிவமாகும். எப்படி?

★ இதை நான்கு சம பகுதிகளாக ஆக்கவும்.

★ இதில் எத்தனை முக்கோணங்கள்?

விடை 28ம் பக்கம்

ஆதாரம்: டிட்பிட்ஸ்
தகவல்: பாலி

---

வரர் ஆலயம் போகிறவர்கள் அருகிலுள்ள சித்தேசுவரர் கோவிலையும் ஒரு முறை வலம் வந்து வைக்கலாம்.

ராஜா-ராணி கோவில் ஒன்பது-பத்தாம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. கோபுரத்தைப் பொம்மையா தாங்குகிறது என்று கேட்பதுண்டல்லவா? இதன் பெரிய கோபுரத்தின் அச்சிலேயே எழிலுறச் சமைந்திருக்கும் சின்னக் கோபுரங்கள் பெரிய கோபுரத்தைத் தாங்குவது போலவே தோன்றுகின்றன. இதற்கு இந்திரேசுவரர் ஆலயம் என்றும் பெயர். மணற் கற்களில் எடுப்பாகக் காட்சி தரும் சிற்பங்கள் களவுக் காதல், கணவனைப் பிரிந்து வாழும் மனைவி கிளியோடு கொஞ்சிக் குலாவுதல், அழகில் சிறந்த நங்கைகள் பூக் கொய்தல் போன்ற சிற்பங்களை இன்றும், என்றும் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். எடுப்பான மூக்கு, நீள் விழிகளின் கூரிய நோக்கு, மதர்த்த மார்பகங்கள், பின்னழகு, கொடியிடை ஆகியவை பார்வையை வேறு புறம் பிறழ விடா.

கேதார் - கௌரி என்று போற்றப்படும் கேதாரேசுவரர் ஆலயத்துக்குப் போகிறவர்கள் இங்குள்ள தீர்த்தத்தை ஒரு வாய் பருகாமல் வர மாட்டார்கள். இதற்கு எந்த நோயையும் தீர்க்கும் சக்தி இருக்கிறதாம். பிறவியும் ஒரு பிணிதானே? பக்தர்கள் இந்த நல்ல தருணத்தை விடுவார்களா? டூரிஸ்ட் பஸ்களில் போகிறவர்கள் பஸ்ஸையும் நோய் தீர்க்கும் நீரையும் விட மனம் இல்லாமல் எப்படிப் பரபரத்துப் போகிறார்கள்?

புவனேசுவரம் என்றவுடனேயே நினைவு வருபவர் லிங்க ராஜர். புரியில் உள்ள ஜகந்நாதர் கோவிலுக்குச் சளைக்காமல் கோவில் எழுப்பிக் கொண்டு வீற்றிருப்பவர்.

கோபுரத்தின் உயரம் நூற்று நாற்பத்தேழு அடி. பொதுவாகவே இப்பக்கத்துக் கோவில்களின் கோபுரங்கள் தேரின் வடிவத்தை நினைப்பூட்டுபவை. லிங்கராஜரின் ஆலயம் ஐந்து ரதங்கள் அமைப்பைக் கொண்டது. மகா லிங்கமாக வீற்றிருக்கும் லிங்கராஜருக்குக் கிருத்திவாஸர் என்று பெயர். அன்னை பார்வதி மட்டும் அழகில்லை; அவள் கோயிலுமே அழகிற் சிறந்தது. இதிகாச புராணங்களில் வரும் அத்தனை பரிவார தேவதைகளும் இங்கே கோவில் கொண்டுள்ளனர். இவர்களையெல்லாம் தரிசித்து வரும் பொழுது கூந்தல் அலங்காரம் செய்துகொள்ளும் பெண்களும், மலர் பறிக்கும் மாதர்களும் வீணை வாசிக்கும் பேரிளம் பெண்களும் கண் சிமிட்டிக் கூப்பிட்டால் அதற்கு அந்த லிங்கராஜர்தான் பொறுப்பு! அவர்களைப் போலவே ஆண்டவனின் அருளைப் பெற்றுத் தரப் பண்டாக்கள் பொருள் வேண்டி நிற்பார்கள். பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லையே! என்ன செய்வார்கள், பாவம்!

பெரும் கோவில்களுக்கே உரிய புழுக்கமும் புழுக்கை வாசனையும் இங்கும் உண்டு; எங்கும் உண்டு.

புவனேசுவரத்துக்குத் தெற்கே எட்டுக் கிலோமீட்டர் தொலைவில் தௌலி என்று ஓர் இடம். இங்கே ஒரு குன்றிலே தவளேசுவரர் கோவில் கொண்டிருக்கிறார். அவரை ஒட்டினாற் போலவே ஜப்பானியர்கள் சமைத்த சாந்தி ஸ்தூபம் இருக்கிறது. எத்தனையோ இடங்கள் இருக்க, இவர்கள் சாந்தி ஸ்தூபத்துக்கு இந்த இடத்தைத் தேடிப் பிடிப்பானேன்? காரணம் இல்லாமல் இல்லை; இந்த இடத்துக்கு வரலாற்றை மாற்றிய பெருமை உண்டு.

பரம்பு மலைப் பகுதியிலே கோட்டை கட்டிச் செங்கோல் ஓச்சிய மன்னன் பாரி. அவன் புகழ் காணப் பொறுக்காமல் மூவேந்தர்களும் இணைந்து முற்றுகை இட்டார்கள். அவன் கோட்டைக்கு உணவு போக வொட்டாமல் தடுத்து விட்டால், அடிபணிந்து விடுவான் என்றும் நம்பினார்கள். அவர்கள் எண்ணம் ஈடேறாமல், பாரி வளர்த்த பறவைகள் வானத்து வழியே முற்றிய கதிர்களாகக் கொண்டு சேர்த்து அவனுக்குக் கை கொடுத்து, இல்லை, இல்லை! அலகு கொடுத்து உதவின. அதைச் சுட்டிக் காட்டிக் கபிலர் மூவேந்தர்களுக்கு ஒரு சீட்டு அனுப்பினார். 'எங்கள் பாரி மன்னனைப் பணிய வைக்க ஒரே வழி இருக்கிறது. யாழ் எடுத்துப் பாடுங்கள். இசையில் மெய் மறந்தால், பாரி வள்ளல் தன் நாட்டையை வாரி வழங்கி விடுவான்.'

அதே காரியத்தை வேறு விதமாக இங்கே கலிங்கத்து மன்னனும் அவன் குடி மக்களும் செய்திருக்கிறார்கள். ஆதிக்க வெறி கொண்டு அசோகன் கலிங்கத்தின் மீது படையெடுத்து லட்சோப லட்சம் மக்களைக் கொன்று குவித்தும், கலிங்கத்து வீரர்கள் அடிபணியவில்லை. 'கொல்லும் ஆயுதங்கள் அனைத்தையும் கீழே போட்டு, அஹிம்ஸை என்னும் ஆயுதத்தை நீ கையில் எடுத்தால் அன்றி உனக்கு வெற்றி கிட்டாது' என்று செயலால் காட்டினார்கள். படுகொலைகளுக்குப் பின் அசோகன் அறிவு தெளிந்து ஆயுதங்களைக் கீழே போட்ட இடம் அது. 'எல்லோரும் ஆண்டவன் குழந்தைகள். ஆண்டவனின் பிரதிநிதியான அரசன் அவர்களின் காப்பாளன்' என்னும் பெருங்கொள்கையை ஏற்ற இடம் இது.

# எம் எஸ் சுப்புலக்ஷ்மி
# பாடியுள்ள
# காசி - இராமேசுவரம்
# சுப்ரபாதம்




உள்ளம் உருக்கும் இரண்டு இனிய சுப்ரபாதங்கள். இந்த ஸ்டீரியோ LP (ECSD 3282) இசைத்தட்டில், காசியில் குடி கொண்டிருக்கும் விசுவநாத ரையும், இராமேசுவரத்தில் வீற்றிருக்கும் இராமநாதரையும் பள்ளியெழுந்தருளும்படிப் பாடிப் பரவுகிறார் எம்எஸ்.

இசைத்தட்டின் ஒரு பக்கம், காசி நகர்ப் புலவர்கள் இயற்றிய காசி விசுவநாத சுப்ர பாதமும், அதைத் தொடர்ந்து ஆதி சங்கரர் அருளிய சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்திரமும், அன்னபூர்ணாஷ்டகமும் அடங்கியுள்ளன.

மறுபக்கம் ஒலிப்பது ''கவி கோகில'' டாக்டர் V. ராகவன் அவர்கள் இயற்றிய இராமேசு வரம்-இராமநாத சுப்ரபாதம். ஈசன் புகழை இனிமையாய்க் கூறுவதோடு, ஆலயம் அமைத்த அண்ணல் இராமன், சீதை மற்றும் அனுமன் ஆகியோர்க்கு அஞ்சலி செலுத்தும் வகையிலும் இது அமைந்துள்ளது. இத்துடன், ''இராமநாதம் பஜேஹம்'' என்ற தீட்சிதர் பாடலையும் பாடியிருக்கிறார் எம்எஸ்.







ஒலிமயமான எதிர்காலம்
**தி கிராமபோன்**
**கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**
கல்கத்தா • பம்பாய் • சென்னை • டில்லி •
கௌஹாத்தி • கான்பூர்

GC-1506

புதிய

# உடனடி-உபயோக

# டிக்-20

உடனடியாக மூட்டைப்பூச்சிகளை ஒழிக்கிறது



மண்ணெண்ணை கலப்பதற்கான மேற்படி செலவு கிடையாது!




கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள், ஃபர்னிச்சர் ஜாயிண்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடி பாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில் வைக்கலாம், காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப்பட்ட ஃபார்முலா கொண்டதாகும். முன்கூட்டியே மண்ணெண்ணை கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.

## இன்றே டிக்-20 வாங்குங்கள்

## இன்றிரவே நன்றாக உறங்குங்கள்.



ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/RIT-2

அந்த அசோகனுடைய கல்வெட்டுக்களை இங்கே ஒரு கல் யானை பாதுகாக்கிறது. மலையேறி, சாந்தி ஸ்தூபத்தில் இருந்து பார்த்தால் கலிங்கத்துப் போர்க்களம் பசுமையோடி, எழில்மிகு வயல்களாக, அமைதியின் சின்னமாகக் காட்சி தருகிறது.

இப்பொழுது புரிகிறதல்லவா, சாந்தி ஸ்தூபம் இங்கே உருவானதற்குக் காரணம்?

புவனேசுவரத்திலிருந்து மீண்டும் கிளை பிரிந்து, பாதை பிரிந்து ஆறு கிலோ மீட்டர் தூரம் போனால், கானகத்துக்கிடையே இரட்டைக் குன்றங்கள் எதிரும் புதிருமாகத் தெரியும். உதயகிரி — கண்டகிரி என்று அழைக்கப் பெறும் இவற்றில் சமணத் துறவிகள் குகைகள் குடைந்து தவமியற்றியிருக்கின்றனர். ராணி குகை, யானைக் குகை இரண்டும் பிரசித்தமானவை. இந்த இயற்கைச் சூழலில் படி ஏறி இறங்கிச் சமணக் கோவில்களைப் பார்க்கத் தெம்பு வேண்டும்.

இப்படிப் பழம் பெருமையை மட்டும் பார்த்தால் போதுமா? புதிய புவனேசுவரத்துக்கு வந்தால், அரசாங்க அலுவலகங்கள் சட்ட மன்றம், உத்கலப் பல்கலைக் கழகம், ரவீந்திர மண்டபம் எல்லாம் இருக்கின்றன. எல்லாவற்றுக்கும் மேலாகப் பார்த்து அனுபவிக்க வேண்டியது மியூஸியம் — தொல் பொருள் காட்சி நிலையம். இங்கு சேமித்து வைக்கப்பட்டிருக்கும் ஓலைச் சுவடிகள் அற்புதமானவை. பனை ஓலைகளில் பழங் காலத்தில் எத்தனை அழகாக, கருக்கழியாத அருமையான வண்ணப் படங்களுடன் பழம்பெருங் காப்பியங்களை எழுதி வைத்திருக்கிறார்கள்! அந்தப் பழைமையான முயற்சி இன்றும் புதுமையுடன் மிளிருகிறது. நாடோடி மக்களின் தத்ரூபமான வாழ்க்கையை அந்தச் சூழலில் பதுமையாக்கிக் காட்டியிருக்கிறார்கள். பதுமைகள் பேசுகிறாற்போல் இருக்கின்றன.

ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் தலைநகரில் இன்னும் ஏதாவது பார்க்காமல் விட்டு விட்டிருப் போமோ? — பூரியில் இருந்தபொழுது இந்த ஐயம் எழுந்தது. எனவே, மறு நாள் காலை ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் இடம் பிடித்துக் கொண்டு புறப்பட்டேன். நான் பார்த்த இடங்கள் அதிகம். அவர்கள் காட்டிய இடங்கள் குறைவு என்ற நிம்மதி ஏற்பட்டது. 'ஆனால் இதென்ன? இந்த பஸ் இன்னும் எங்கே போகிறது?' என்று வியந்த வேளையிலே இருபத்தைந்து கிலோ மீட்டர் ஓடி நடுக் காட்டிலே போய் நின்றது.

'சிங்கம், புலி ஏதாவது இருந்தால்...?'

நான் பயந்தது சரியாகப் போயிற்று. ''சிங்கம் புலியைப் பார்க்கத்தான் போகிறோம்'' என்றார் வழிகாட்டி ஸ்ரீ நித்யானந்த சட்டர்ஜி.

ஆம், ஆயிரம் ஏக்கர் நிலப் பரப்பிலே, இயற்கைச் சூழலிலே வன விலங்குகளின் ஆலயமாகத் திகழும் இதற்கு 'நந்தன் கானன்' என்று பெயர்.

எங்கள் வழிகாட்டிக்கு ஒரே உற்சாகம். இந்த உற்சாகத்தைக் கண்ட கிரி-உதயகிரியிலோ மற்ற இடங்களிலோ காட்டக் காணோமே என்று எண்ணினேன். அவர் ஒவ்வொரு மிருகத்தின் பிறப்பு, வளர்ப்பு, வம்சாவளி ஆகியவற்றை, வனவிலங்குத் துறையினரைக் காட்டிலும் ஒரு படி மேலாகவே சொல்லிக் கொண்டு வந்தார். அவற்றின் பெயரைக் கூறி அவர் அழைத்தால் அவை நெருங்கி வந்து மகிழ்ந்தன.

''இந்த மிருகங்கள் உங்களிடம் எப்படி இவ்வளவு பிரியமாக இருக்கின்றன?'' என்று கேட்டேன்.

''அதுவா? தினம் வழிகாட்டிப் பணியை மேற்கொண்டுள்ள எனக்கு இவற்றிடம் ஒரு பந்த பாசம் ஏற்பட்டு விட்டது. ஒரு நாள் கூட இவற்றைக் காணாமல் என்னால் இருக்க முடிவதில்லை. இவற்றைப் போய் 'வொய்ல்ட் லைஃப்' என்கிறோமே, இவை எவ்வளவு 'மைல்ட் லைஃப்' ஆக இருக்கின்றன, பாருங்கள்! இறைவன் எனக்கு வைத்த இன்பங்களிலே இதைத்தான் நான் பெரிதாகப் போற்றி மகிழ்கிறேன்!'' என்றார் அவர்.

''புவனேசுவரம் போய் வந்தேனே, நம் தமிழர்களை யெல்லாம் பார்க்காமல் வந்து விட்டேன். அது இப்பொழுது மனத்தை உறுத்துகிறது, சார்!'' என்றேன் என் கட்டக் நண்பரிடம்.

''நாளைக் காலை வரை பொறுத்துக்கொள்ளுங்கள்! புவனேசுவரத்தவர்களை இங்கேயே பார்த்து விடலாம்!'' என்று சமாதானம் கூறினார் நண்பர். ஏதோ ஒப்புக்குக் கூறுகிறார் என்று எண்ணினேன். மறு நாள் அவர் கூறியபடியே, புவனேசுவரம் - கட்டக் இரண்டு ஊர்களிலிருந்துமே தமிழ்க் குடும்பங்கள் வந்திருந்தன — குழந்தை குட்டிகளோடு!

நண்பர் நிகழ்த்திய அற்புதம் என்ன, தெரியுமா? எத்தனையோ மாதங்களுக்குப் பின் நல்லதொரு தமிழ்ப் படம் காட்ட ஏற்பாடு செய்திருந்ததுதான்!

இறைவன் வைத்த எத்தனையோ இன்பங்களில் இதுவும் ஒன்றுதானே?



## அறிவுச் சுடர்!

ஈரோட்டில் உள்ள கலைமகள் கல்வி நிலையத்தில் பயிலும் மாணவிகள் அப்பள்ளியில் எஸ்.எஸ்.எல். ஸி. தேர்வில் தேர்ச்சி பெற்றவுடன் தங்கள் பள்ளியின் நிர்வாகிகளிடமிருந்து ஓர் அழகான குத்துவிளக்கை அன்பளிப்பாகப் பெற்றுச் செல்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும் இதற்காக, அப்பள்ளி நிர்வாகிகள் ஒரு விழாவே நடத்துகின்றனர். அவ் விழாவில் ஒரு பெரிய குத்துவிளக்கு எல்லா முகங்களும் ஏற்றப்பட்டு நடுவில் வைத்திருக்கும். பள்ளி நிர்வாகி இறுதி ஆண்டுத் தேர்வில் வெற்றி பெற்ற ஒவ்வொரு மாணவியையும் அழைத்து அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்படும் விளக்குகளைப் பெரிய குத்துவிளக்கிலிருந்து சுடர் எடுத்து ஏற்றி, வாழ்த்தி வழங்கி வழி அனுப்புகிறார்கள்.

கடந்த பல ஆண்டுகளாக, இந்த நிறுவனம் எஸ். எஸ். எல். ஸி. தேர்வில் நூறு சத விகித வெற்றியைத் தொடர்ந்து பெற்று வருகிறது!

-லலிதா நாராயணன்


இப்பொழுது!
1000 கி
எக்கானமி
பாக்கெட்

# ஏப்ரல் பிறக்கிறது: ஏமாறாதீர்கள்!

பிரான்ஸ் தேசத்தில் ஒரு பெண்மணி தனது தோழி ஒருத்தி வீட்டிலிருந்து ஒரு கடிகாரத்தைத் திருடிக் கொண்டு வந்து விட்டாள். பிறகு போலீசுக்குத் தன் தோழியின் சார்பில் தானே தகவல் தெரிவித்தாள். போலீஸார் எங்கெல்லாமோ கடிகாரத்தைத் தேடி அலைந்து தவித்த பின்னர், கடைசியில் புகார் கொடுத்த பெண்மணி வீட்டிலேயே அது ஒளித்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டுபிடித்தனர். உடனேயே அந்தப் பெண்மணி, ''ஏப்ரல் முட்டாள் ஆனீர்களா!'' என்று கேலி செய்தாள். போலீஸார் இந்த ஜோக்கை அனுபவிக்கவில்லை. நீதிமன்றத்துக்கு அவளைக் கொண்டு சென்றனர். நீதிபதி, ''அடுத்த ஏப்ரல் முட்டாள் தினம் வரை நீ சிறையில் இருப்பாயாக!'' என்று தீர்ப்பு வழங்கினார்.

உண்மையென்னவெனில் அந்தப் பெண்மணி நிஜமாகவே கடிகாரத்தைத் திருடிவிட்டாள். அப்புறம் பயம் பிடித்துக் கொண்டது. எனவே இதை ஏப்ரல் முட்டாள் விளையாட்டாக்கி விடலாம் என்று எண்ணியிருக்கிறாள். அந்த யுக்தி பலிக்கவில்லை!

நம்பினால், நம்புங்கள், நம்பாவிட்டால் போங்கள்! ஸ்காட்லாந்தில் இது உண்மையாகவே நடந்தது. சில நபர்கள் அபிஸீனிய சக்கரவர்த்தி போலும் அவரது குடும்பத்தினர் மெய்க்காவலர்கள் போலும் வேஷமணிந்து போர்ப்படைக் கப்பல் ஒன்றுக்கு விஜயம் செய்தனர். அவர்களுக்கு இருபத்தோரு முறை பீரங்கி குண்டு வெடித்து வணக்கம் செலுத்துவது உட்பட சகலவிதமான மரியாதைகளும் நடந்தன!

நியூயார்க்கில் ஒரு சமயம் சில நண்பர்கள் நகரசபை உழைப்பாளிகள் போல் உடையணிந்து அந்நகரின் பிரதான சாலையொன்றில் ''சாலை பழுது பார்க்கப்படுகிறது'' என்ற அறிவிப்புப் பலகையை வைத்து விட்டுத் தோண்ட ஆரம்பித்து விட்டார்கள். சாலையின் குறுக்கே நெடுகிலும் ஆழக் குழிபறித்து விட்டுச் சென்ற பிறகுதான் தெரிய வந்தது அவர்கள் நகரசபை அதிகாரிகளின் உத்தரவு பெற்றவர்கள் அல்ல என்பது!

1860-ல் பல லண்டன் பிரமுகர்களுக்கு ஓர் அழைப்பு வந்தது. லண்டன் டவர் வாசலில் இருக்கும் சிங்கச் சிலைகளைக் கழுவிச் சுத்தப்படுத்தும் வருடாந்திர விழாவில் கலந்து கொள்ள வருமாறு கோரியது அந்த அழைப்பிதழ். இதை நிஜமென்றும், ஆண்டுதோறும் அப்படி ஒரு சம்பிரதாயம் உண்டு என்றும் நம்பிப் பல பிரமுகர்கள் போய்ச் சேர்ந்தார்கள்! ஏப்ரல் முட்டாள்களானார்கள். அழைப்பிதழை அனுப்பியவர் — நல்ல காலம் — இதுவரை யாரென்பதே தெரியவில்லை!

ஃபிலடெல்ஃபியா பிரஸ் நாளிதழ் ஆசிரியர் ஓர் ஏப்ரல் முட்டாள் விளையாட்டு நடத்தினார். அன்று காலை நாளிதழில் பியரி கிராண்டியர் என்பவரைப் பற்றி ஒரு செய்தி வெளியாயிற்று. இவர் சிலந்திப் பண்ணை ஒன்று நடத்துவதாகவும் அந்தச் சிலந்திகள் பின்னும் வலைகளை விற்பதாகவும் கூறியது அந்தக் குட்டிச் செய்தி. 'அதனை வாங்குவோர் யார்?' என்ற கேள்விக்கும் விடையளித்தது. பெரும்பாலும் மது வியாபாரிகள் தம்மிடமுள்ள மது எவ்வளவு பழமையானது என்பதை உணர்த்துவதற்காகச் சிலந்தி வலைகளை வாங்கிப் போய்த் தங்கள் கைவசம் உள்ள மது பாட்டில்கள் மீது பரப்பி வைப்பார்கள் என்று அந்தச் செய்தி விவரித்தது.

இதை நிஜமென்றே நம்பி மது வியாபாரிகள் பலர் பியரி கிராண்டியரின் விலாசத்தைக் கோரி அந்தப் பத்திரிகை நிறுவனத்துக்குக் கடிதம் எழுதினர். வேறு பலர் தாங்களும் சிலந்திப் பண்ணை நடத்த விரும்புவதாகவும் அதன் நுணுக்கங்களை அறிய பியரியை அணுக விரும்புவதாகவும் கூறி விலாசம் கேட்டிருந்தனர். காரியாலயத்துக்கு வந்து குவிந்த கடிதங்களுக்குக் கணக்கு வழக்கு இல்லை!

ஓர் அரசனிடம் பணியாற்றிய அதிகாரி பல பிரமுகர்களை ஏப்ரல் முட்டாளாக அடித்த சம்பவமும் உண்டு. பல பெரிய மனிதர்களுக்கு இவர் விருந்துக்கு வருமாறு அழைப்பிதழ் அனுப்பினார். விருந்தினர் அவர் இல்லத்துக்கு வந்து சேர்ந்த போது அங்கே அவர் இருக்கவில்லை. நீண்ட கூடத்தில் மேஜை, நாற்காலி, ரத்தினக் கம்பளம் ஏதும் இருக்கவில்லை. ஒரே ஒரு கழுதை மட்டும் கூடத்தின் ஒரு மூலையில் ஏப்ரல் முட்டாள் என்ற அறிவிப்பு அட்டையைக் கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டு நின்றது. விருந்தினரைப் பார்த்ததும் கட்டிப் போடப்பட்டிருந்த அந்தக் கழுதை பெரிதாகக் குரல் எழுப்பிக் கத்தி வரவேற்றது!

ஆதாரம்: சுயராஜ்யாவில் எஸ். ஜே. ஆர். எழுதிய கட்டுரை.



# ராஜாஜி

## வாழ்க்கை வரலாறு



இந்தியாவின் மூதறிஞர் தாதாபாய் நௌரோஜி கல்கத்தா காங்கிரஸுக்குத் தலைமை வகித்தார். அவர் தேசத்துக்கு சுயராஜ்யம் வேண்டினார். அதுவரை முழங்கால் மண்டியிட்ட நிலைக்குப் பழகி விட்டிருந்த காங்கிரஸ் கல்கத்தா மகாநாட்டுக்குப் பிறகு நிமிர்ந்து நின்றது. திலகருக்கு ரொம்ப சந்தோஷம். இருபத்தெட்டு வயதான ஸி. ஆர். மெய் சிலிர்த்தார். பம்பாயின் சிங்கம் ஃபிரோஷ்ஷா மேத்தா அனல் பறக்கப் பேசிய போதிலும் அவர் மிதவாதிகளின் தலைவரே. ஒருசமயம் அவர் பிரிட்டிஷ் ஆட்சியை 'நமக்குக் கிடைத்த அற்புதமான வெகுமதி' என்று வர்ணித்திருந்தார். அவர் இப்போது தம் மூக்குடை பட்டது போல் உணர்ந்தார். மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்கும் இடையில் போராட்டம் தவிர்க்க முடியாததாகி விட்டது.

தீவிரவாதிகள் பக்கம் நின்ற ஸி. ஆர். 1907 ஜூலை ஹிந்துஸ்தான் ரெவ்யூவில் எழுதினார்: ''எதற்கும் அசைந்து கொடாமல் ஆட்சி அதிகாரத்தில் அமர்ந்து இந்தத் தேசத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும் நிலையில் உள்ளவர்களின் கவனத்தைக் கவர வேண்டுமானால் சட்டபூர்வமான கிளர்ச்சிகளில் தீவிரமான முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம்தான்.'' படிப்படியாகச் சீர்திருத்தங்கள் என்பதை எதிர்க்காது போனாலும் அவர் அது தொடர்பாகக் கூறினார்: ''எச்சில் இலையை எறிவது போல் நடந்து கொள்வதால் நாய்களுக்கே இயல்பான, ஆசைகள் அற்ற ஒரு கீழ்த்தரமான இருப்பினை உருவாக்கப் பார்க்கிறார்கள். இதனைச் சக்தி வாய்ந்த விதத்தில் எதிர்ப்பதும் தடுப்பதும் மிகவும் அவசியம்.''1

படிப்படியான சீர்திருத்தங்களின் சில படிகளைக் கவனிப்பதாகக் கூறிக் கொண்டு அயல் விவகார மந்திரி மார்லே பிரபுவும் கர்ஸானுக்கு அடுத்தபடி வைஸ்ராயான மிண்டோ பிரபுவும் இந்தியப் பிரமுகர்கள் பலர் அடங்கிய ஓர் ஆலோசனைக் குழு அமைக்க எண்ணினர். இந்த ஆலோசனைக் குழு அங்கத்தினர்களை பிரிட்டிஷ் அதிகாரிகளே நியமிப்பர். ''இத்தகைய ஒரு குழு, நாம் மனமில்லாமலேயே நமது எதிரிகள் என்று அழைக்க வேண்டிய நிலையில் உள்ளவர்கள் கரத்தில் ஒரு புதிய ஆயுதமாக இருக்கும்'' என்று ஸி. ஆர். அபிப்பிராயப்பட்டார்.2

மிண்டோ – மார்லே திட்டத்தை 'ஏமாற்று வித்தை' என்றும் 'பிரித்தாளும் சூழ்ச்சி' என்றும் தாக்கிய ஸி. ஆர். பின்வருமாறு வற்புறுத்தினார்: ''இது நாள் வரை நம்மால் அரசியல் அதிகாரத்திலிருந்து விலகி இருக்க முடிந்ததல்லவா? இப்போது, தேசத்தின் எதிர்காலத்தை நிர்ணயிக்கப் போகிற இந்தக் கணத்தில் அசட்டுத்தனமாகச் சிறிய ஆசைகளில் சிக்கிவிடாமல் இருப்போம்.''3

### மிதவாதிகளும் தீவிரவாதிகளும்

ஸி. ஆரின் செல்வாக்கு காரணமாகவும் விஜயராகவாச்சாரியாரின் ஆதரவு காரணமாகவும் சேலம், தீவிரவாதிகளின் கோட்டை ஆயிற்று. சூரத்தில் 1907 டிசம்பரில் மிதவாதிகளுடன் நடக்க வேண்டியிருந்த பலப்

---

1. ஹிந்துஸ்தான் ரெவ்யூ, பாட்னா, ஜூலை 1907.
2. மேற்படி
3. மேற்படி
4. Tahmankar, Lokamanya Tilak, John Murray, London, 1956-8-146
5. மேற்படி, பக்கம் 146.
6. மேற்படி, பக்கம் 183,

பரீட்சைக்குத் தென்னாட்டுப் பிரதிநிதிகள் பலரை அழைத்துச் சென்றார். கனன்று கொண்டிருந்த வி. ஆர். அவர்களில் பலருக்கு இவரே கை விட்டுச் செலவு செய்து டிக்கெட் எடுத்ததாகத் தெரிகிறது. அவரது



○ விஜயராகவாச்சாரி



○ நௌரோஜி

உற்சாகம் பலன் தரவில்லை. அதனைப் பயன் படுத்தக் கூட முடியவில்லை.

மேத்தாவினால் இயக்குவிக்கப்பட்ட மிதவாதிகள் மேடையைக் கட்டிக் காத்தனர். வி. ஆரின் கண்களுக்கு மட்டுமின்றி நாட்டு மக்களின் கணிசமான பகுதியினருக்கும் மாவீரராகத் திகழ்ந்த திலகர், காங்கிரஸ் அக்ராசனப் பதவி சம்பந்தமாய் ஒரு கேள்வி எழுப்ப விரும்பினார். அவரைப் பேசக் கூடாது என்று கூறி விட்டார்கள். அவர் மேடை ஏற முயன்றபோது தொண்டர்களான இளம் மிதவாதிகள் அவரைப் பலவந்தமாகக் கீழே இழுத்து விட முயன்றார்கள்.

திலகர் அவையோரைப் பார்த்தபடி அசையாமலும் பணிந்து விடாமலும் கைகட்டி நின்றார்.[4] திடுமென்று ஒரு காலணி பறந்து வந்து மேத்தாவைத் தாக்கியது. அப்புறம் ஒரே அமர்க்களம்தான். அங்கும் இங்கும் பலர் கோபத்துடன் கத்திக் கொண்டும், தடிகளை உயர்த்திக் கொண்டும் ஓடினார்கள்.[5] காங்கிரஸ் கூட்டம் ஒரே குழப்பத்தில் கலைவதை வி. ஆர். பார்த்தார். காங்கிரஸ் பிளவு பட்டது. அவரைப் போன்ற தீவிரவாதிகள் ஸ்தாபனத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர். 1915 வரை மிதவாதிகளே காங்கிரஸுக்கு உரிமைகொண்டாடினர்.

தீவிரவாதிகள் வெளியேற்றப்பட்டதால் ஆட்சியாளர் திருப்தி அடைந்து விடவில்லை. அவர்கள் மிதவாதிகளின் கோரிக்கைகளைக் கூட ஏற்பதில் சிரத்தை காட்டவில்லை. அதற்குப் பதிலாக, ராஜத் துவேஷக் கூட்டங்கள் சட்டம், இந்தியப் பத்திரிகைகள் சட்டம் ஆகியவற்றின் மூலம் எல்லா எதிர்ப்பையுமே அடக்கிவிடப் பார்த்தனர்.

''கேசரி''யில் எழுதிய கட்டுரைகளுக்காகத் திலகர் ஆறு ஆண்டுகள் கடுங் காவல் தண்டனை பெற்றார். தாம் குற்றமற்றவர் என்று உறுதியாக நம்பிய அவர், நீதி மன்றத்தில் அறிவித்தார்: ''நான் எந்த நோக்கங்களுக்காகப் பாடு படுகிறேனோ, அவை நான் சுதந்திரமாக இருப்பதை விடக் கஷ்டங்களை அனுபவிப்பதன் மூலமே அதிக சக்தி பெற வேண்டும் என்பது ஆண்டவன் கட்டளை போலும்''[6] பர்மிய நாட்டில் மாண்டலே சிறையில் அந்த ஆறு ஆண்டுகளைக் கழிக்க வேண்டியவரானார் திலகர்.

## சென்னை காங்கிரஸ்

1908 டிசம்பரில் சென்னையில் கூடிய காங்கிரஸ் சோகை பிடித்த ஒன்றாக விளங்கியது. மிதவாதக் கொள்கைகளுக்கு எழுத்து மூலம் ஒப்புதல் அளித்தவர்களே கலந்துகொள்ள அனுமதிக்கப்பட்டனர். இப்படிக் கையெழுத்துப் போட்டுத் தராமலேயே மகாநாட்டில் கலந்து கொள்ளும் உரிமைக்காக வி. ஆர். போராடினார். இதை முன்னிட்டு மிதவாதிகளின் போக்கைக் கண்டிக்கும் ஓர் அறிக்கையை அவர் பிரசுரித்தார். அதில் அவருடன் வழக்கறிஞர்களான அவரது சேலம் நண்பர்கள் கே. நடேச அய்யரும், ஆர். வி. கிருஷ்ண அய்யரும் சேர்ந்து கொண்டார்கள். இந்த அறிக்கை நாட்டின் பல பாகங்களிலும் பயன் படுத்தப்பட்டது.

வி. ஆரின் முயற்சி தோல்வி யுற்றது. அதே சமயம் சேலத்தை வி. ஆரின் செல்வாக்கிலிருந்து விடுவித்து விட வேண்டும் என்று மிதவாதிகள் மேற்கொண்ட முயற்சியும் தோல்வியுற்றது. பின்னால் ''ஹோ

ராஜ்மோகன் காந்தி

வண்ட்ஸ் ஆஃப் இந்தியா சொஸைட்டி'' தலைவராக விளங்கவிருந்த வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி மிதவாதி அனுதாபிகளான பிரதிநிதிகளுக்காகச் சேலத்தைச் சல்லடை போட்டுச் சலித்துவிட்டு வெறுங் கையுடன் சென்னை காங்கிரஸ் மகாநாட்டுக்கு வந்து சேர்ந்தார்.

### மின்டோ - மார்லே சீர்திருத்தம் குறித்து ஏமாற்றம்

வி. ஆரும் அவரது நண்பர்களும் பார்வையாளர்களாக அமர்ந்திருந்த சென்னை காங்கிரஸ் சிறிது காலம் முன்பு அறிவிக்கப்பட்ட மின்டோ–மார்லே சீர்திருத்தம் குறித்து மகிழ்ச்சி தெரிவித்தது. ஆனால் சொல்லி முடியாத ஏமாற்றமே காத்திருந்தது. புதிய திட்டம், இந்தியாவில் நாடாளு மன்ற முறை உருவாக்குவதற்கான முன்னோடி அல்ல என்று மார்லே அறிவித்து விட்டார்.

அடக்குமுறையானது பலாத்காரத்துக்கு உரமிட்டுக் கொண்டிருந்தது. 1908 ஏப்ரலில் முசஃபர்புரில் ஒரு பிரிட்டிஷ் நீதிபதி மீது குண்டு வீசப்பட்டது. அவர் தப்பி விட்டார். ஆனால் அவருடன் இருந்த இரு ஆங்கிலேய மாதர் கொல்லப்பட்டனர். இதற்குக் காரணமாயிருந்த குதிராம் போஸ் விசாரணைக்குள்ளாகித் தூக்கிலிடப்பட்டார். புரட்சியாளர்கள் இதற்குப் பழிவாங்க ஓர் 'அப்ரூவ'ரையும், இரு அதிகாரிகளையும் கொன்றனர்.

இருப்பினும் அந்தக் குண்டு அயல் நாட்டானைப் பயந்து ஓடச் செய்துவிடும் என்று தோன்றவில்லை. அவன் நிலைமையைக் கட்டுக்குள் அடக்கி வைத்திருந்தான். அவனது பிரதான எதிரிகள்தாம் செயலிழந்து போயிருந்தனர். திலகர் கடலுக்கப்பால் சிறை வைக்கப்பட்டிருந்தார். அரவிந்தரோ தெற்கே பிரெஞ்சு ஆளுகையின் கீழ் இருந்த பாண்டிச்சேரிக்குள் தம்மைத் தாமே சிறைப் படுத்திக் கொண்டிருந்தார்.

1908-ம் ஆண்டினை உடனடியாகத் தொடர்ந்து வந்த வருஷங்களில் வி. ஆருக்கும் அவரைப் போன்ற வேறு பலருக்கும் சுதந்திரம் என்பது நனவாக முடியாத ஒரு கனவாகவே தோன்றியது. 1905 லும் 1906லும் அவர்களிடம் உயர்ந்து எழுந்த நம்பிக்கை இப்போது அவர்களைச் சுற்றிச் சிதைந்து கிடந்தது.

### ஒரு வழக்குக்கு ஆயிரம் ரூபாய்!

சேலம் வாசமே தொடர்ந்த போதிலும் 1906ல் சென்னை உயர் நீதிமன்றத்தில் வழக்காட வி. ஆர். பதிவு செய்து கொள்ளப் பட்டிருந்தார். அந்த ஆண்டில் மங்கா அவருக்கு ஒரு பெண் மகவை — நாமகிரி — பெற்றுத் தந்தாள். அவர்களது மூன்றாவது குமாரன் நரசிம்மன் 1909ல் பிறந்தான். 1918ல் அவர்களது இரண்டாவது மகள் —கடைசிக் குழந்தை லட்சுமி பிறக்கவிருந்தாள்.

தமது ஆடைகள் புதிதாகவும் நேர்த்தியாகவும் இருக்க வேண்டும்[7] என்ற விருப்பத்தில் வி. ஆர். தமது சட்டைகளைச் சென்னையில் தைத்துக் கொண்டார். நெற்றியில் ஸ்ரீசூர்ணம் அணிந்தார். நீதிமன்றம் செல்கையில் சரிகை வேலைப்பாடுடன் கூடிய வெள்ளைத் தலைப்பாகை தரித்தார். அந்த டர்பன் துணியை மடித்து வீட்டிலே இஸ்திரி போடுவதற்கு இரண்டு பேர் இரு முனைகளிலும் இழுத்துப் பிடித்துக் கொள்ள வேண்டியிருந்தது![8] டர்பனுக்குக் கீழே உடையும் கச்சிதமாக இருந்தது.

வேஷ்டியைப் பஞ்ச கச்சமாக அணிந்து விரைப்பான காலருடன் கூடிய சட்டையும், கழுத்து வரை பித்தான் போடத் தக்க கறுப்புக் கோட்டும், கறுப்பு ஸாக்ஸும் ஷூவும் அணிந்திருந்த வி. ஆர். சீக்கிரமே மிகப் பிரபலமான வழக்கறிஞரானார். முதல் ஆண்டிலிருந்தே அவரிடம் கேஸ்கள் வந்து குவிந்தன.[9] விரைவிலேயே கட்சிக்காரர்கள் ஒரு வழக்குக்கு ஆயிரம் ரூபாய் வரை அவருக்குக் கொடுத்தார்கள்.

அவர் அதிகமாகப் பணம் வாங்கியது நேரத்தை மிச்சப்படுத்த ஒரு வழி. நண்பர்களுடன் கலந்து, பழக, உல்லாசப் பொழுது போக்குகளில் ஈடுபட, சமூகச் சீர்திருத்தங்கள் பற்றித் தம் மனத்திலிருந்த கருத்துக்களை நடைமுறைக்குக் கொண்டு வர முயல ஆகியவற்றுக்கு அவருக்கு அவகாசம் தேவைப்பட்டது. சிலசமயம் சக்கரவர்த்தி அய்யங்கார் முந்நூறு ரூபாயோ ஐந்நூறு ரூபாயோ குறைவான தொகை அல்லவென்றும் கட்சிக்காரரைத் திருப்பி அனுப்பி விட வேண்டாம் என்றும் தம் மகனை வற்புறுத்துவார். ஆனால் வி. ஆர். இதற்கு இசைவதில்லை.

### நண்பர் குழாம்

அவருக்கும் டி. விஜயராகவாச்சாருக்கும் இடையில் ஓர் அந்நியோன்ய சிநேகம் ஆரம்பமாயிற்று. அவர் முப்பது மைல்கள் தள்ளி நாமக்கல்லில் வருவாய்த் துறை வட்டார அதிகாரியாக இருந்தார். அங்கே வி. ஆர். பல வழக்குகளை உத்தேசித்துப் போக வேண்டி யிருந்தது. இந்த நண்பர் பின்னாளில் கொச்சின் திவானாகவும் உதய்ப்பூர் திவானாகவும் விளங்கினார்.

இக்காலத்தில் வி. ஆருடன் நெருங்கிப் பழகியவர்களில் சிலரைக் கவனிப்போம்: வக்கீல் பி. வி. நரசிம்ம அய்யர் பின்னாளில் சென்னை மேல் சபை அங்கத்தினரானார். வக்கீல் கே. ஜி. வேங்கடசுப்பய்யர் சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் விரிவுரையாளராகவும் பணியாற்றியவர்; வக்கீல்களான எம். டி. சுப்பராய அய்யரும் சடகோப முதலியாரும் சேலம் நகராட்சி கல்லூரித் துணைத் தலைவர் கே. சேஷ

7. வி. சமாசார், இந்நூலாசிரியருக்கு அளித்த பேட்டியில், 1973.
8. லக்ஷ்மி தேவதாஸ் காந்தி, ராஜாஜி-93. பக்கம் 69.
9. ஆர். வி. கிருஷ்ண அய்யர், இந்நூலாசிரியருக்கு அளித்த பேட்டியில், 1973.

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறுர்கள் டாக்டர்கள்



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே; மென்றுதின்னப் பழக்குங்கள்...மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் தீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**

தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் கல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம் எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TH

Interpub/GSC/2/76 R-Tml

# சிந்தால்

## இந்தியாவில் துர்நாற்றம் நீக்கும் ஒரே சோப்பு!

வியர்வையால் உண்டாகும்
உடல் துர்நாற்றத்தைத்
திறனுடன் தடுக்கிறது.

எவ்வொரு சோப்பும் செய்யாத
அளவில் உங்களை முழுமையான
புத்துணர்வுடன் திகழச்
செய்கிறது.




சிறப் பராமரிப்பிற்காக சரும
வல்லுநர்களால் சிபாரிசு செய்யப்பட்டது.

அய்யர்; அதிகாரியாக அன்று இருந்து பின்னுல் திட்டக் கமிஷன் துணைத் தலைவராக விளங்கப்போகிற வி. டி. கிருஷ்ணமாச்சாரி; வி. ஆரின் உதவியுடன் சேலம் நகர கூட்டுறவுச் சங்கத்தைத் தோற்றுவித்த எஸ்.வி. கிருஷ்ண செட்டியார் (இது பின்னுல் ஒரு பாங்க் ஆகவே மாறியது); வியாபாரியாக இருந்து டப்ளினிலும் லண்டனிலும் படித்து பாரிஸ்டராக மாறிய டி. ஆதிநாராயண செட்டி; சேலத்தின் இளம் வக்கீலாக விளங்கி பின்னுல் சென்னை சட்ட சபைக் காரியதரிசி பதவியை இரு முறை வகிக்கப் போகிற ஆர். வி. கிருஷ்ண அய்யர் ஆகியோர்.

இந்த நண்பர்கள் அவர்களில் யாராவது ஒருவர் வீட்டிலோ அல்லது சேலம் இலக்கியச் சங்கத்திலோ கூடி கலாசார, விஞ்ஞான அரசியல் விஷயங்களைப் பேசினுர்கள். ஒரு புத்தகச் சங்கம் அமைத்துப் புதிய படைப்புக்களை அலசி விமரிசித்தார்கள். இசைக்கும் இடமுண்டு. வி. விஜயராகவாச்சாரியார் வீட்டில் ஒரு பிரிட்டிஷ் நீதிபதிக்கு நடந்த பிரிவுபசார விருந்தில் சேலம் கோதாவரி பாடியது வி. ஆர். மனத்தில் பதிந்தது.

இலக்கியச் சங்கத்தில் விளையாட்டுக்களும் உண்டு. சுமாராக டென்னிஸ் ஆடுபவராக விளங்கினுர் வி. ஆர். பில்லியர்ட்ஸ் பந்துகளைத் தாக்கினுர். சீட்டாடவும் செய்தார். ஆனுல் ஓர் ஆட்டத்தின்போது ஏற்பட்ட சச்சரவுக்குப் பிறகு சீட்டை இனித் தொடுவதில்லை என்று தீர்மானித்து விட்டார்.

(தொடரும்)

தமிழாக்கம்: **வெ. ராஜேந்திரன்**






☐ கல்கி அவர்களால் 'டப்பா சங்கீதம்' என்று வர்ணிக்கப்பட்ட இசை இன்று மெல்லிசை, பாப் இசை என்று பல பெயர்களைப் பெற்றுள்ளது. மிகவும் பிரபலமடைந்து மக்களின் பேராதரவைப் பெற்று வருகிறது. மேற்கத்திய பாணிகளைக் காப்பியடித்து ஆபாசமான ஜாடைகளுடன், கைகால் அசைவுகளுடன் நிகழ்ச்சிகளை நடத்துகிறுர்கள். கேட்கக் குழுமியவர்களையும் பாட்டிலே சேர்ந்து கொள்ளச் சொல்கிறுர்கள். இந்தக் கேலிக்கூத்து மனிதனின் கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவதாக ஆரம்பித்து விரைவில் ஒரே ஆபாசக் கூச்சலாகி விடுகிறது. இதில் இசையும் இல்லை; இசைவும் இல்லை.

இத்தகைய நிகழ்ச்சிகள், வாலிப உள்ளங்களை ஏற்கெனவே பாழ்படுத்தி வருகின்றன. இப்பாடல் குழுக்களோ வானளாவப் புகழப்படுகின்றன. நல்ல கூட்டம் வருவதால் இத்தகைய நிகழ்ச்சிகளை வழங்குவோரின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போகிறது. இந்தக் காளான் வேகமாகப் பரவி உண்மையான நல்ல இசையை அமுக்கி வருகிறது.

தரமான இசை மனங்களை உன்னத நிலைக்கு உயர்த்த வேண்டும். நமது பண்பாட்டில் அதற்குச் சிறப்பிடம் உண்டு. இந்த இசைதாய கர்நாடக இசையை வெகுவாகப் பாதித்துள்ளது. போலி கரன்ஸி நோட்டுக்களை அரசு எப்படி நிராகரிக்குமோ, அவ்வாறே இந்தப் போலி இசை மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டும். தாமதிப்பதற்கில்லை.

திருவனந்தபுரம்
17–2–77 டி. ஜி. பி. ஹரன்

☐ 'காலமடி காலம்' பட விமர்சனத்தில் வி. கே. ராமசாமி பாகவதர் கச்சேரி செய்வது கலகலப்பூட்டுவதாக உள்ளது என்று 'காந்தன்' எழுதியுள்ளார். வி. கே. ராமசாமி பாகவதராக நடித்துக் கச்சேரி செய்துள்ள படம் 'அவர் எனக்கே சொந்தம்'. விமர்சகர் இரண்டு படங்களையும் அடுத்தடுத்துப் பார்த்ததால் வந்த குழப்பமா?

மதுரை—11
10–3–77
கு. வரதராசன்

# வளரும் பருவம்
# கால்ஷியம்-ஸான்டோஸ்® பருவம்

வளர்ச்சி நின்றுவிட்ட பிறகு, எவ்வளவு கால்ஷியம் சாப்பிட்டாலும் பற்கள் வலுவாகவும், எலும்புகள் ஆரோக்கியமாகவும் வளர உதவ முடியாது.

ஒழுங்காக கால்ஷியம் வில்லைகள் சாப்பிட்டு வரும் குழந்தைகளின் வளர்ச்சி மற்ற குழந்தைகளைவிட, அதிவேகமாக இருக்கிறது என்றும் அவர்களுக்கு அதிக எடை கூடுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள்* நிரூபித்துள்ளன. உண்மையில், வளரும் பருவம் கால்ஷியம்-ஸான்டோஸ் பருவம்!

பற்கள் ஆரோக்கியமாகவும், எலும்புகள் உறுதியாகவும் அமைந்து வளர்வதற்கு கால்ஷியம்-ஸான்டோஸ் வில்லைகள் துணை புரிகின்றன. வைட்டமின் C, D மற்றும் B12 ஆகிய சத்துக்களால் வளமூட்டப்பட்ட, ராஸ்ப்பெர்ரி சுவை கொண்ட கால்ஷியம் ஸான்டோஸ் வில்லைகள் ருசியானவை. குழந்தைகளுக்கு மிகவும் பிரியமானவை!

கால்ஷியம்-ஸான்டோஸ்-ஸ்விட்ஸர்லாந்தில் ஸான்டோஸ் உருவாக்கியுள்ள, உலகிலேயே தலை-சிறந்த கால்ஷியம்.

*கால்ஷியம் சப்ளிமென்டேஷன் டெஸ்ட்ஸ்—டாக்டர் டபிள்யு. ஆர். அக்ராயிட் மற்றும் டாக்டர் பி.ஜி. கிருஷ்ணன் சமர்ப்பித்துள்ள ஆராய்ச்சித் தாள்.





## கால்ஷியம்-ஸான்டோஸ்®

வலுவுள்ள பற்களுக்கும்,
உறுதியான எலும்புகளுக்கும்




daCunha/CS/20 N TAM

## அத்தியாயம் 12

# சூரிய கிரகணம்

விக்கிரமனும் பொன்னனும் மண்டபம் அடைந்தபோது நன்றாக இருட்டி விட்டது. இம்மாதிரி ஜன சஞ்சார மில்லாத இடங்களில் வழிப்போக்கர்கள் தங்குவதற்காக அத்தகைய மண்டபங்களை அந்நாளில் கட்டியிருந்தார்கள். மகேந்திரச் சக்கரவர்த்தியின் காலத்தில் அவருடைய கட்டளையினால் கட்டப்பட்டபடியால் அவற்றுக்கு மகேந்திர மண்டபங்கள் என்று பெயர் வழங்கி வந்தது.

மண்டபத்துக்கு வெளிப்புறம் இருந்த திண்ணையில் விக்கிரமனை இருக்கச் செய்து, பொன்னன் உள்ளே சென்று தான் அங்கு வைத்திருந்த உலர்ந்த துணிகளை எடுத்துவந்தான். விக்கிரமன் அவற்றை உடுத்திக் கொண்டான். அந்த மழைக்கால இருட்டில் இனி வழி நடப்பது அசாத்தியமாதலால் அன்று இரவை அந்த மண்டபத்திலேயே கழிப்பது என்று இருவரும் சேர்ந்து தீர்மானித்தார்கள்.

பிறகு, பொன்னன் அருள்மொழி ராணியைப் பற்றிய பின்வரும் அதிசயமான வரலாற்றைக் கூறினான்:

விக்கிரமன் தேசப்பிரஷ்டத் தண்டனைக்கு உள்ளாகிக் கப்பல் ஏறிச் சென்ற பிறகு, அருள்மொழி ராணிக்கு உயிர் வாழ்க்கை பெரும் பாரமாக இருந்தது. மீண்டும் தம் புதல்வனை ஒரு முறை காணலாம் என்ற ஆசையினாலும் நம்பிக்கையினாலுமே உயிரைச் சுமந்து கொண்டிருந்தாள். ஆனாலும், முன்னர் கணவனுடனும், பிறகு புதல்வனுடனும் வசித்திருந்த வசந்த மாளிகையில் தன்னந் தனியாக வசிப்பது அவளுக்கு நரக வேதனையாக இருந்தது. இச்சமயத்தில்தான் பார்த்திப மகாராஜாவின் தோழரும், பழைய பல்லவ சேனாதிபதியுமான பரஞ்சோதி அடிகள் தமது தர்மபத்தினியுடன் தீர்த்த யாத்திரை செய்து கொண்டு உறையூருக்கு வந்தார். அவர்கள் வசந்த மாளிகைக்கு வந்து அருள்மொழி ராணியைப் பார்த்துத் தேறுதல் கூறினார்கள். அருள்மொழி அவர்களுடன் தானும் ஸ்தல யாத்திரை வருவதாகச் சொல்லவே, அவளையும் அழைத்துக்கொண்டு பிரயாணம் கிளம்பினார்கள்.

காஞ்சி நகர் ஒன்று நீங்கலாகத் தமிழகத்திலுள்ள மற்ற புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் அவர்கள் சென்றார்கள். இரண்டு வருஷ காலம் இவ்விதம் யாத்திரை செய்த பிறகு சென்ற வருஷம் தை மாதத்து அமாவாசையில் காவேரி சங்கமத்தில் ஸ்நானம் செய்யும் பொருட்டு அவர்கள் பரஞ்சோதி அடிகளின் சொந்த ஊராகிய திருச்செங்காட்டாங்குடிக்கு வந்து சேர்ந்தார்கள்.

சென்ற வருஷம் தை அமாவாசையில் மகோதய புண்ணிய காலம் சேர்ந்தது. அதனுடன் அன்று சூரிய கிரகணம்—சம்பூரண கிரகம் – பிடிப்பதாயுமிருந்தது. இந்த விசேஷ புண்ணிய தினத்தை முன்னிட்டு அன்று காவேரி சங்கமத்தில் சமுத்திர ஸ்நானம் செய்வதற்காக நாடெங்குமிருந்து ஜனங்கள் திரள் திரளாக வந்தார்கள். பொன்னனும் வள்ளியும் கூட உறையூரிலிருந்து நெடுநாள் பிரயாணம் செய்து காவேரி சங்கமத்துக்கு வந்து சேர்ந்தனர். உறையூர் வாழ்க்கை அவர்களுக்கும் பிடிக்காமற் போயிருந்தபடியாலும், அருள்மொழி ராணியை ஒருவேளை சந்திக்கலாம் என்ற ஆசையினாலும்தான் அவர்கள் வந்தார்கள். அவர்களுடைய ஆசையும் நிறைவேறியது. திருச்செங்காட்டாங்

**பார்த்திபன் கனவு**

**அமரர் கல்கி**

குடியிலேயே அருள்மொழித் தேவியை அவர்கள் சந்தித்துக் கொண்டார்கள்.

புண்ணிய தினத்தன்று காலையில் பரஞ்சோதி அடிகள், அவருடைய பத்தினி திருவெண்காட்டு நங்கை, அருள்மொழி ராணி, பொன்னன், வள்ளி எல்லோருமாகக் காவேரி சங்கமத்துக்குக் கிளம்பினார்கள். சங்கமத்தில் அன்று கற்பனைக்கடங்காத ஜனத் திரள் கூடியிருந்தது. உலகத்தில் உள்ள மக்கள் எல்லாரும் திரண்டு வந்து விட்டார்களோ என்று தோன்றிற்று. ஜன சமுத்திரத்தைக் கண்ட உற்சாகத்தினால் ஜல சமுத்திரமும் பொங்கிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.



சமுத்திரம் பொங்கிக் காவிரிப் பூம் பட்டினத்தைக் கொள்ளை கொண்ட காலத்துக்குப் பிறகு, காவேரி நதியானது மணலைக் கொண்டு வந்து தள்ளித் தள்ளிச் சமுத்திரத்தை அங்கே வெகு தூரத்துக்கு ஆழமில்லாமல் செய்திருந்தது. இதனால் சமுத்திரத்தில் வெகு தூரம் விஸ்தாரமாக ஜனங்கள் பரவி நின்று ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். அலைகள் வரும்போது ஜலத்தில் முழுகியும், அலைகள் தாண்டியவுடன் மேலே கிளம்பியும் இவ்வாறு அநேகர் சமுத்திர ஸ்நானத்தின் குதூகலத்தை அனுபவித்துக்கொண்டே புண்ணியமும் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட ஜனக் கூட்டத்தின் மத்தியில் பரஞ்சோதி அடிகள், அருள்மொழி ராணி ஆகியவர்களும் ஸ்நானம் செய்வதற்காகச் சமுத்திரத்தில் இறங்கிச் சென்றார்கள்.

இப்போது சூரிய கிரகணம் பிடிக்க ஆரம்பித்து விட்டது. அதிக வேகமாகச் சூரியனுடைய ஒளி குறைந்து கொண்டு வந்தது. கிரகணம் முற்ற, முற்ற வெளிச்சம் குன்றி வந்ததுடன் சமுத்திரத்தின் கொந்தளிப்பும் கோஷமும் அதிகமாகி வந்தன.

பட்டப்பகலில் மேகமில்லாத துல்லிய ஆகாயத்தில் திடீரென்று சூரிய ஒளி குன்றி இருள் சூழ்ந்து வந்த காட்சியினால் சகலமான ஜனங்களுக்கும் மனத்தில் இன்னதென்று சொல்லமுடியாத ஒருவித அச்சம் உண்டாயிற்று. அப்போது இயற்கையிலேயே தெய்வ பக்தி உள்ளவர்கள் அண்ட சராசரங்களை யெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் இறைவனுடைய லீலா விபூதிகளை எண்ணிப் பரவசம் அடைந்தார்கள். பரஞ்சோதி அடிகள் அத்தகைய நிலையைத்தான் அடைந்திருந்தார். ராணி அருள்மொழித் தேவியும் கண்களை மூடிக் கொண்டு கிழக்குத் திசையை நோக்கித் தியானத்தில் ஆழ்ந்திருந்தாள்.

வள்ளி சமுத்திரத்தையே அன்று வரையில் பார்த்தவள் இல்லை. ஆகையால் அவள் நெஞ்சு 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. அவளை அலை அடித்துக் கொண்டு போகா வண்ணம் பொன்னன் அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தான். வள்ளி பொன்னனிடம், ''எனக்குப் பயமாக இருக்கிறதே, கரைக்குப் போகலாமா?'' என்றாள். ''இவ்வளவு

தானு உன் தைரியம்?'' என்று பொன்னன் அவளிடம் சொல்லிக் கொண்டிருக்கும்போது திடீரென்று அந்த அதிசயமான துயரச் சம்பவம் — யாரும் எதிர்பாராத காரியம் நடந்து விட்டது.

ராணி அருள்மொழி மூடியிருந்த கண்களைத் திறந்தாள். ''குழந்தாய், விக்கிரமா! இதோ வந்து விட்டேன்!'' என்று கூவினாள். ராணியின் அந்த அலறும் குரல் ஒலி, அலைகளின் பேரிரைச்சலை யெல்லாம் அடக்கிக்கொண்டு மேலெழுந்து, பொன்னன், வள்ளி இவர்கள் செவியில் விழுந்தது. இந்த அலறல் ஒலி கேட்டது ஒரு கணம்; மறு கணத்தில் அருள்மொழி ராணி கிழக்கு நோக்கிக் கடலிலே பாய்ந்தாள்.

ஒரு பேரலை வந்து மோதி அவளை மூழ்கடித்தது

பொன்னனும், வள்ளியும் 'ஓ' வென்று கதறினார்கள். தியானத்திலிருந்து கண் விழித்த பரஞ்சோதி அடிகள், ''என்ன, என்ன?'' என்றார். பொன்னன், ''ஐயோ! மகாராணி அலையில் போய்விட்டாரே!'' என்று அலறினான். உடனே பரஞ்சோதி அடிகள் தமது பத்தினியையும் வள்ளியையும் நோக்கி, ''நீங்கள் உடனே கரை ஏறி விடுங்கள்!'' என்றார்.

அச்சமயத்தில் சூரிய கிரகணம் சம்பூரணம் ஆயிற்று. வானத்தில் நட்சத்திரங்கள் தெரிந்தன.



இருட்டினால் கலவர மடைந்த ஜனங்களின் மத்தியில், 'அப்பா!' 'அம்மா!' 'மகனே!' என்ற கூக்குரல்கள் கிளம்பின. பக்தர்களுடைய பரவசக் குரலில், ''ஹர ஹர'' ''சம்போ!'' என்னும் கோஷங்களும் எழுந்தன.

அந்தக் கிரகண அந்தகாரத்தில், கடல் அலைகளுடன் போராடிக்கொண்டு பரஞ்சோதி அடிகளும் பொன்னனும் அருள் மொழி ராணியைத் தேடத் தொடங்கினார்கள்.

## அத்தியாயம் 13

# கபால பைரவர்

அருள்மொழித் தேவி ''குழந்தாய்! விக்கிரமா! இதோ வந்து விட்டேன்!'' என்று அலறிக் கொண்டு அலைகடலிலே பாய்ந்தாள் என்ற விவரத்தைக் கேட்ட போது விக்கிரமனுடைய கண்களில் நீர் ததும்பி வழிய ஆரம்பித்து விட்டது. அச்



"வெண்டைக்காய் புதுசா, பழசா?"
"புழுசு" -கோ. தீபா

சமயம் கடல்களுக்கப்பால் எங்கேயோ தான் இருக்கும் விஷயம் தன் தாயின் நினைவுக்கு வந்து அதன் பயனாகத்தான் அப்படி அவள் வெறி கொண்டு பாய்ந்திருக்க வேண்டும் என்று விக்கிரமன் எண்ணினான்.

பொன்னன் தானும் பரஞ்சோதி அடிகளும் தேவியைத் தேடியதைப் பற்றிச் சொல்லி வந்தபோது விக்கிரமன், "பொன்னா! சீக்கிரம் சொல்லேன்! மகாராணி அகப்பட்டாரா?" என்று கதறினான்.

"இல்லையே, மகாராஜா! அகப்படத்தானே இல்லை! அப்புறம்மகாராணியைத் தரிசிப்பதற்கு இந்தப் பாழும் கண்கள் கொடுத்து வைக்கவில்லையே!" என்று பொன்னனும் கண்ணீர் விட்டான்.

"பின்னே மகாராணி உயிரோடுதான் இருக்கிறார் என்று சற்று முன்பு சொன்னாயே? எனக்கு ஆறுதலுக்காகச் சொன்னாயா? — ஐயோ! இந்தச் செய்தியைக் கேட்கவா நான் கப்பலேறிக் கடல் கடந்து வந்தேன்!" என்று விக்கிரமன் புலம்பினான்.

அப்போது பொன்னன், "பொறுங்கள் மகாராஜா! குறையையும் கேளுங்கள். மகாராணி உயிரோடுதான் இருக்கிறார்; சந்தேகமில்லை. அவர் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கத்தான் முயன்று கொண்டிருக்கிறேன். நீங்களும் வந்து விட்டீர்கள். இனிமேல் என்ன கவலை?" என்றான் பொன்னன்.

பிறகு நடந்த சம்பவங்களையும் தான் அறிந்த வரையில் விவரமாகக் கூறலுற்றான்.:

அலைகளுக்கு மத்தியில் அடர்ந்த இருளில் பரஞ்சோதி அடிகளும் பொன்னனும் அருள்மொழி ராணியை வெகு நேரம் தேடினார்கள். மகாராணி அகப்படவில்லை.

"பொன்னா! தேவியைச் சமுத்திர ராஜன் கொண்டு போய்விட்டான்" என்று பரஞ்சோதி அடிகள் துக்கம் ததும்பும் குரலில் கூறினார். பொன்னன் 'ஓ' என்று அழுதான்.

இனிமேல் ஒருவேளை அகப்பட்டாலும் உயிரற்ற உடல்தான் அகப்படுமென்று இரண்டு பேருடைய மனத்திலும் பட்டுவிட்டது. உயிரற்ற உடலை அலைகளே கரையில் கொண்டு வந்து தள்ளிவிடும். இனியும் தேடுவதில் ஓர் உபயோகமும் இல்லை. இவ்வாறு மனத்தில் எண்ணிக் கொண்டு இரண்டுபேரும் கரை ஏறினார்கள். அவர்கள் கரைக்கு வந்த சமயத்தில் கிரகணம் விட ஆரம்பித்திருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அந்தகாரத்தை அகற்றிக் கொண்டு சூரியனுடைய ஒளி நாலா திசைகளிலும் வியாபித்து வந்தது. மாரிக்காலத்து மாலை வேளையைப் போல் தோன்றிய அச் சமயத்தில் பரஞ்சோதியாரும் பொன்னனும் கரை ஏறியபோது, அங்கே வெட வெடவென்று குளிரில் நடுங்கிக் கொண்டு நின்ற பரஞ்சோதியாரின் பத்தினியும், வள்ளியும், "வாருங்கள்! சீக்கிரம் வாருங்கள்!" என்று கூவினார்கள். அவர்கள் விரைந்து அருகில் நெருங்கியதும், யாரோ ஓர் ஒற்றைக் கை மனிதன் அப்போதுதான் கடலிலிருந்து கரையேறியதாகவும், அவன் அந்த ஒற்றைக் கையினால் ஒரு ஸ்திரீயைத் தூக்கிக் கொண்டு போனதாகவும் மங்கிய வெளிச்சத்தில் பார்த்தபோது அருள்மொழி ராணி மாதிரி இருந்ததென்றும், தாங்கள் கையைத் தட்டிக் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கும்போதே அம்மனிதன் ஜனக் கூட்டத்தில் சட்டென்று மறைந்து போய் விட்டதாகவும் சொன்னார்கள். ஒரே படபடப்புடன் பேசிய அவர்களிடமிருந்து மேற்கண்ட விவரங்களைத் தெரிந்து கொள்வதற்கே சற்று நேரம் ஆகிவிட்டது. முன்னால் அலை கடலில் அருள்மொழி ராணியைத் தேடிய பொன்னனும் பரஞ்சோதியாரும் இப்போது மறுபடியும் ஜன சமுத்திரத்தில் ராணியைத் தேடத் தொடங்கினார்கள். இதுவும் நிஷ்பலனே ஆயிற்று. மாநிலத்திலுள்ள மாந்தர் யாவரும் திரண்டு வந்திருந்ததுபோல் தோன்றிய அந்தப் பெரிய ஜனக் கூட்டத்தில் ஒற்றைக் கை மனிதனையும் அவர்கள் காணவில்லை; அவன் ஒரு கையினால் தூக்கிச் சென்ற அருள்மொழி ராணியையும் காணவில்லை. எவ்வளவோ தேடியும் அகப்படாமல் போகவே, இரு வெண்காட்டு நங்கையும் வள்ளியும் பார்த்ததாகச் சொன்னதிலேயே அவர்களுக்கு அவநம்பிக்கை உண்டாயிற்று.

அது ஒருவேளை அவர்களுடைய பிரமை யாக இருக்கலாமென்று நினைத்தார்கள். ஆனால், அம்மூதாட்டியும் வள்ளியுமோ தாங்கள் நிச்சயமாகப் பார்த்ததாக ஆணையிட்டுக் கூறினார்கள்.

மேற்கண்ட வரலாற்றைச் சொல்லி முடித்த பிறகு அருள்மொழி ராணி இன்னும் உயிரோடுதான் இருக்கிறார் என்று தான் நம்புவதற்குக் காரணம் என்ன என்பதையும் பொன்னன் கூறினான். வள்ளியும் அவனும் சில தினங்கள் வரையில் செங்காட்டாங்குடியிலிருந்துவிட்டு, அருள்மொழி ராணியைப் பற்றிய மர்மத்தைத் தெரிந்து கொள்ளாமலே திரும்பி உறையூர் சென்றார்கள். அங்கே போய்ச் சில நாளைக்கெல்லாம் சிவனடியார் வந்து சேர்ந்தார். மகாராணியைப் பற்றிய வரலாற்றைக் கேட்டு அவர் பெருந் துயரம் அடைந்தார். ஒற்றைக் கை மனிதனைப் பற்றிய விவரம் அவருக்குப் பெருவியப்பை அளித்தது. வள்ளியைத் திரும்பத் திரும்ப அவளுக்கு ஞாபகம் இருக்கும் விவரத்தையெல்லாம் சொல்லும்படி கேட்டார். கடைசியில் அவர், ''பொன்னா! வள்ளி சொல்வதில் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. ராணியை ஒற்றைக் கை மனிதன்தான் கொண்டு போயிருக்கிறான். ராணி உயிருடனேயே இருக்கிறாள் என்பதிலும் சந்தேகமில்லை. அவள் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்க வேண்டியது நம்முடைய பொறுப்பு'' என்றார். பிறகு அவர், ''அந்த ஒற்றைக் கை மனிதன் யார் தெரியுமா?'' என்று கேட்டார். ''தெரியாதே சுவாமி!'' என்று பொன்னன் சொன்னபோது சிவனடியார், ''அவன் தான் கபால ருத்திர பைரவன். கபாலிக மதக் கூட்டத்தின் தலைமைப் பூசாரி. தமிழகத்தில் நரபலி என்னும் பயங்கரத்தை அவன் பரப்பிக் கொண்டு வருகிறான். அதைத் தடுப்பதற்குத்தான் நான் பிரயத்தனப்பட்டுக் கொண்டு வருகிறேன். எங்கேயோ ஓர் இரகசியமான இடத்தில் அவன் ரணபத்திர காளி கோயில் கட்டியிருக்கிறானாம். அந்த இடத்தைக் கண்டுபிடித்தோமானால், அங்கே அநேகமாக நமது ராணியைக் காணலாம்'' என்றார்.

இதைக் கேட்டுப் பொன்னன் நடு நடுங்கிப் போனான். ''ஐயோ! மகாராணியை ஒருவேளை காளிக்குப் பலி கொடுத்திருந்தால்...'' என்று அலறினான். ''இல்லை, பொன்னா, இல்லை! கேவலம் ஒரு பலிக்காகக் கபால பைரவன் இவ்வளவு சிரமமுள்ள ஒரு காரியத்தில் தலையிட்டிருக்க மாட்டான். வேறு ஏதோ முக்கிய அந்தரங்க நோக்கம் இருக்கிறது. ஆகையால், ராணியை உயிரோடு பத்திரமாய் வைத்திருப்பான். ரணபத்திர காளி கோயில் இருக்கும் இடத்தை நாம் கண்டுபிடிக்க வேண்டும்'' என்றார் சிவனடியார்.

இதன் மேல் பல்லவ சோழ நாடுகளைப் பொன்னனும் சிவனடியாரும் இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு, ஒவ்வொருவர் தேடுவது என்று தீர்மானித்துக் கொண்டார்கள். பொன்னன் வள்ளியைத் தன்னுடைய அத்தை வீட்டில் விட்டுவிட்டு, சோழ நாடு முழுவதும் தேடி அலைந்தான். பிறகு, காவேரியின் அக்கரைக்கு வந்து தேடத் தொடங்கினான்.

மாதக் கணக்காகத் தேடி அலைந்ததற்குக் கடைசியாக நாலு நாளைக்கு முன்புதான் பலன் கிடைத்தது. அந்தக் காட்டாற்றின் கரையோடு பொன்னன் மேற்கே மூன்று நாலு காத தூரம் போன பிறகு ஒரு பெரிய மலையின் அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தான். அந்த மலையடிவாரத்தில் வெகு தூரம் அடர்த்தியான காடு சூழ்ந்திருந்தது. அவன் வழி பிடித்துக் கொண்டு வந்த காட்டாறானது அந்த மலை உச்சியிலிருந்துதான் புறப்பட்டிருக்க வேண்டுமென்றும், அந்த மலை கொல்லி மலையின் ஒரு பகுதியாயிருக்கலாமென்றும் பொன்னன் ஊகித்தான். அந்த வனப் பிரதேசத்தைப் பார்த்தவுடனேயே, இதற்குள் எங்காவதுதான் ரணபத்திர காளியின் கோயில் இருக்க வேண்டும் என்று பொன்னனுக்குத் தோன்றியது. அந்த மலைக்கு உட்புறத்தில் காட்டு மிராண்டி ஜனங்கள் வசிப்பதாகப் பொன்னன் கேள்விப் பட்டிருந்தான். அவர்கள் சில சமயம் மலைக்கு வெளியில் நரபலி கொடுப்பதற்காக மனிதர்களைக் கொண்டு போவதுண்டு என்றும் கேள்விப்பட்டிருந்தான். ஆகவே, பொன்

வெற்றி அறிக்கை

அமெரிக்காவில் உள்ள அனைவரையும் அழைக்கிறேன்— நீங்கள் என்னை ஆதரித்தவராயினும் சரி, அல்லது ஃபோர்டை ஆதரித்தவராயினும் சரி, அல்லது வேறு யாரையேனும் ஆதரித்தவராயினும் சரி — அனைவரும் ஒன்றுபட்டு நமது தவறுகளைத் திருத்திக் கொண்டு சிரமமான பிரச்னைகளுக்கு விடை கண்டு நமது தேசத்தை உன்னத நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டிய தருணம் இது.

கார்ட்டர்









◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

னன் அந்த வனப் பிரதேசத்தில் நாலா புறத்திலும் தேடி அலைய ஆரம்பித்தான். ஆனால், எந்தப் பக்கத்திலும் அதிக தூரம் காட்டுக்குள் புகுந்து போவதற்குச் சாத்தியப்படவில்லை.

கடைசியாக, காட்டாறு பெருகி வந்த வழியைப் பிடித்துக் கொண்டு போனான். போகப் போக ஆறானது குறுகிச் சிறு அருவியாயிற்று. அந்த அருவியின் வழியாக மலைமேல் ஏறிச் செல்வது அவ்வளவு சுலபமான காரியமாக இல்லை. சில இடங்களில் பெரிய பெரிய பாறைகள் கிடந்தன. சில இடங்களில் ஆழமான மடுக்கள் இருந்தன. இன்னும் சில இடங்களில் முள் மரங்கள் அடர்த்தியாகப் படர்ந்து புகுந்து போக முடியாமல் செய்தன. வேறு சில இடங்களில் பாறையில் செங்குத்தாக ஏற வேண்டியதாயிற்று. பொன்னன் இதற்கெல்லாம் சிறிதும் சளைக்காமல் ஏறிச் சென்று கொண்டிருந்தான்.

காலையிலிருந்து மத்தியானம் வரையில் இவ்விதம் ஏறி மிகவும் களைத்துப் போன பொன்னன் கடைசியாக ஒரு பாறையின் மீது உட்கார்ந்தான். ''இனிமேல் இறங்கிப் போக வேண்டியதுதான். வேறு வழியில்லை. இராத்திரியில் இந்த வனப் பிரதேசத்துக்குள் அகப்பட்டுக் கொண்டால் காட்டு மிருகங்களுக்கு இரையாக நேரலாம்'' என்று அவன் எண்ணிக் கொண்டிருந்தபோது, திடீரென்று மனிதப் பேச்சுக் குரல் கேட்டது. அந்த நிர்மானுஷ்யமான காட்டில் மனிதக் குரலைத் திடீரென்று கேட்டதில் பொன்னனுக்கு ஒரு பக்கத்தில் திகில் உண்டாயிற்று. இன்னொரு பக்கத்தில் ஒருவேளை நாம் தேடி வந்த காரியம் சித்தியாகப் போகிறதோ என்ற எண்ணத்தினால் ஆவலும் பரபரப்பும் அளவில்லாமல் பொங்கின. எதற்கும் ஜாக்கிரதையாக இருக்கலாம் என்று பொன்னன் பக்கத்தில் நீட்டிக்கொண்டிருந்த ஒரு பாறைக்குக் கீழே சரேலென்று ஒளிந்து கொண்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம் மேலேயிருந்து இரண்டு மனிதர்கள் இறங்கி வருவது தெரிந்தது. ஆனால் எப்பேர்ப்பட்ட மனிதர்கள்? — அவர்கள் மனிதர்கள்தானா? — ஒருவன் மனிதன்தான், சந்தேகமில்லை. ஆனால் அவ்வளவு பயங்கரத் தோற்றம் கொண்ட மனிதனை அதற்கு முன்னால் பொன்னன் பார்த்ததேயில்லை. அவனுக்கு அந்தப் பயங்கரத் தோற்றத்தை அளித்தவை முக்கியமான அவனுடைய உருட்டி விழிக்கும் பார்வையுடைய சிவந்த கண்கள் தான். இன்னும் அவனது உயர்ந்து வளர்ந்த உடலின் ஆகிருதி, நீண்ட பெரிய மீசை, தலையில் அடர்த்தியாக வளர்ந்து சுருட்டை சுருட்டையாகத் தொங்கிய செம்பட்டை மயிர், நெற்றியில் அப்பியிருந்த செஞ்சந்தனம், அதன் மத்தியில் இரத்தச் சிவப்பான குங்குமப் பொட்டு — இவையெல்லாம் அவனுடைய தோற்றத்தின் பயங்கரத்தை அதிகமாக்கின. அவன் ஒரு கரிய கம்பளிப் போர்வையைப் போர்த்தியிருந்தான். ஒரு பாறையிலிருந்து இன்னொரு பாறைக்குத் தாண்டியபோது அந்தப் போர்வை நழுவிற்று. அப்போது பொன்னன் ''ஹா!'' என்று கதறி விட்டிருப்பான். ஆனால், பயத்தினாலேயே அவனுடைய தொண்டையிலிருந்து சத்தம் வரவில்லை. பொன்னனுக்கு அவ்வளவு ஆச்சரியத்தையும், பயத்தையும் உண்டாக்கிய காட்சி என்னவென்றால், அந்த மனிதனுக்கு ஒரு கை இல்லாமல் இருந்தது தான்! அதாவது வலது தோளுக்குக் கீழே முழங்கைக்கு மேலே அவனுடைய கை துண்டிக்கப்பட்டு முண்டமாக நின்றது.

''அருள்மொழி ராணியைத் தூக்கிச் சென்றதாக வள்ளியும் திருவெண்காட்டு அம்மையும் கூறியவன் இவன் தான்! 'கபால ருத்திர பைரவன்' என்று சிவனடியார் கூறியவனும் இவன் தான்!'' என்று பொன்னனுக்கு உடனே தெரிந்து போய்விட்டது.

கபால பைரவனின் தோற்றம் மட்டுமல்ல, அவனுடன் இருந்த இன்னொரு மனிதனின் தோற்றமும் பொன்னனுக்குத் திகைப்பை அளித்தது. ஆமாம். அவனும் மனிதன்தான் என்பது அருகில் வந்தபோது தெரிந்தது. ஆனால், அவன் விபரீதமான குள்ள வடிவமுள்ள மனி

தன், பத்து வயதுப் பையனின் உயரத்துடன், நாற்பது வயது மனிதனின் முதிர்ந்த முகமுடையவனு யிருந்தான். அவ்வளவு குள்ளனு யிருந்தும், அவன் கபால பைரவனைப் பின்பற்றி அந்த மலைப் பாறைகளில் அதி விரைவாகத் தாவித் தாவிச் சென்றது, பொன்னனுடைய வியப்புடன் கலந்த திகிலை அதிகரிப்பதா யிருந்தது.

* * *

பொன்னன் கூறிய வரலாற்றில் மேற்கண்ட இடத்துக்கு வந்ததும், விக்கிரமனும் அளவிலாத ஆவலைக் காட்டினுன். அந்தக் குள்ளனை நன்ருக விவரிக்கும்படி சொன்னுன். பொன்னன் அவ்விதமே விவரித்துவிட்டு, ''மகாராஜா! என்ன விசேஷம்? இம்மாதிரி யாரையாவது நீங்கள் வழியில் பார்த்தீர்களா, என்ன?'' என்று கேட்டதற்கு விக்கிரமன், ''ஆமாம்; பொன்னு! அதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். உன்னுடைய வரலாற்றைச் சொல்லி முடி'' என்ருன்.

''இனிமேல் அதிகம் ஒன்றுமில்லை, மகாராஜா! அருவிப் பாதையில் அவர்கள் இருவரும் வெகு தூரம் இறங்கிப்போய்விட்டார்கள் என்று தெரிந்து கொண்டு நான் மேலே வந்தேன். அவர்கள் இருப்பிடத்தையும் காளி கோயிலையும் கண்டு பிடித்து விடலாம், ஒருவேளை மகாராணியையே பார்த்தாலும் பார்த்து விடுவோம் — என்ற ஆசையுடன் அந்த அருவிப் பாதையைப் பிடித்துக் கொண்டு மேலே ஏறினேன். ஆனுல் சிறிது நேரத்துக்கெல்லாம் என் ஆசை பாழாகிவிட்டது. ஏனென்ருல், மேலே கொஞ்ச தூரம் போனதும் அருவியானது மூன்று ஆள் உயரத்திலிருந்து செங்குத்தாக விழுந்தது. பாறையும் அங்கே செங்குத்தாக இருந்தது. அவ்விடத்தில் பாறையின் மேலே ஏறுவதோ, மேலே இருந்து கீழே இறங்குவதோ மனிதர்களால் முடியாத காரியம். அப்படியானுல் இவர்கள் எப்படி வந்தார்கள்? மேலேயிருந்து யாராவது கயிறு அல்லது நூலேணி தொங்க விட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால், அந்த இடத்துக்கும் நாங் ஒளிந்திருந்த இடத்துக்கும் மத்தியில் எங்கேயாவது இரகசிய வழி இருக்க வேண்டும். ஆன மட்டும் தேடிப் பார்த்தேன். மகாராஜா! பிரயோஜனப் படவில்லை. எப்படியும் போனவர்கள் திரும்பி வருவார்கள் என்று நினைத்து, மலையடிவாரத்துக்கு வந்து மூன்று தினங்கள் காத்திருந்தேன். போனவர்கள் திரும்பி வரவில்லை. அதன்மேல் சிவனடியாரிடம் தெரிவித்து யோசனை கேட்கலாமென்று கிளம்பி வந்தேன். நல்ல சமயத்திலே வந்தேன் மகாராஜா!'' என்று பொன்னன் முடித்தான்.

''ஆமாம், நல்ல சமயத்தில்தான் வந்தாய், பொன்னு! இல்லாவிட்டால் இத்தனை நேரம் நான் ஒருவேளை என் தந்தை இருக்கும் இடம் போய்ச் சேர்ந்திருப்பேன்!'' என்ருன் விக்கிரமன்.

''எனக்கும் ஒருவேளை அந்தக் கதிதான் நேர்ந்திருக்கும், மகாராஜா! இப்படிப் பெருகி வந்த பெருவெள்ளம் அவ்வளவும் அந்த மலையிலிருந்து தானே வந்திருக்கிறது? மழை பிடித்த போது அங்கே நான் அகப்பட்டுக் கொண்டிருந்தேனுனுல்... தங்களை எங்கே பார்க்கப் போகிறேன்! மகாராணியைத் தான் எப்படித் தேடப் போகிறேன்?''

''மகாராணி அந்த மலையில் இருக்கிருர் என்று உனக்கு நம்பிக்கை இருக்கிறதா, பொன்னு?'' என்று கேட்டான் விக்கிரமன்.

''ஆமாம், மகாராஜா! முன்னே, சிவனடியார் சொன்னபோது கூட எனக்கு அவ்வளவு நம்பிக்கைப் படவில்லை. ஆனுல் அந்த ஒற்றைக் கை பைரவனைப் பார்த்த பிறகு நிச்சயமாய் மகாராணி பிழைத்துத்தான் இருக்கிருர் என்ற நம்பிக்கை உண்டாகிறது.''

''எப்படியோ என் உள்ளத்திலும் அந்த நம்பிக்கை இருக்கிறது பொன்னு! என்னைப் பார்க்காமல் அம்மா இறந்து போயிருப்பார் என்று என்னுல் நினைக்க முடியவே யில்லை. சென்ற ஆறு மாதமாக மகாராணி என் கனவில் அடிக்கடி தோன்றி வருகிருர். தை அமாவாசையன்று என் பெயரைக் கூவிக்கொண்டு கடலில் பாய்ந்ததாகச் சொன்னுயே, கிட்டத்தட்ட அந்த நாளிலிருந்துதான் அடிக்கடி அவர் கனவில் வந்து என்னை அழைக்கிருர். அவர் உயிரோடுதான் இருக்க வேண்டும். ஐயோ! இந்த நிமிடத்தில் கூட அவர் என்னைக் கூவி அழைக்கிருர். பொன்னு! அம்மா! அம்மா!....'' என்று அலறினுன் விக்கிரமன்.

அப்போது பொன்னன் சட்டென்று விக்கிரமனுடைய வாயைப் பொத்தி, ''மகாராஜா! பொறுங்கள்!'' என்ருன். பிறகு ''அதோ கேளுங்கள். ஏதோ சத்தம் கேட்கிறது. மனிதக் குரல்!'' என்று காதோடு கூறினுன்.

உண்மையிலேயே அந்த இருண்ட மண்டபத்துக்கு வெளியே யாரோ இருவர் பேசிக் கொண்டு வரும் சத்தம் கேட்டது. (தொடரும்)



விமல் மித்ர

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

## 5. பலே போக்கிரி!

இத்தொடர்ச்சிக்கு இத்துடன் முற்றுப் புள்ளி விழுந்து விட்டதாகவே எண்ணினேன். வாழ்க்கைப் பாதையில் எத்தனையோ பேர் எதிர்ப்படுகிறார்கள், உறவாடிப் பழகுகிறார்கள். அப்புறம் பழகிய சுவடே தெரியாமல் திடுமென்று காணாமற் போயும் விடுகிறார்கள். எனது வாழ்வின் தொடக்கத்திலிருந்து பார்த்தால், வாழ்க்கைப் பாதை முழுவதிலும் நான் மக்களைத் தேர்த்திருவிழாக் கூட்டம் போலக் கண்டிருக்கிறேன். ஒருவருக்குப் பின் ஒருவராக இடையறாது வந்து போன வண்ணம் இருந்திருக்கிறார்கள்.

என்னைப் போலத்தானே மற்றவர்களும்? அவர்கள் வாழ்க்கைப் பயணத்தில் கூடப் பாதை நெடுக இப்படித்தானே கூட்டம் குழுமியிருக்கும்? அந்தக் கூட்டத்தில் யார் யார் எப்பொழுதெப்பொழுது சந்தித்துக் கொள்கிறார்களோ, பிரிந்து போகிறார்களோ? இல்லையெனில் எப்பொழுதோ எங்கோ பார்த்த ஏதோ ஒரு சரயுவை இந்தக் கல்கத்தாவில் மீண்டும் சந்திப்பானேன்? சந்தித்ததுதான் சந்தித்தோமே, சந்தித்த கையோடு அவள் மாயமாய், மந்திரமாய் மறைந்தும் போவானேன்? மனித சமுதாயம் எத்தனை விந்தையானதோ, அத்தனை விந்தையானது மகா நகரம் என்று விளங்கும் இந்தக் கல்கத்தா. தேர்த் திருவிழாக் கூட்டம் எல்லாம் இங்கு தோற்க வேண்டியதுதான். கல்கத்தாக் கூட்டத்துக்கு அதெல்லாம் உறை போடக் காணுமா? மனிதன் புண்ணியம் செய்யவும் இங்குதான் வரவேண்டியிருக்கிறது, பாவம் செய்யவும் இதைத்தான் நாட வேண்டியிருக்கிறது. பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இருபதாம் நூற்றாண்டின் இந்த நாள்வரையில் இந்த விதிமுறை மீறப்படவில்லை.

அதே பழைய நகரம்தான். என்றாலும் அன்றாடம் புதுக் கோலம் பூண்டு மனிதனைத் திகைக்க வைக்கிறது. நாள்தோறும் நாம் நடக்கும் பழைய சாலைதானே என்று எண்ணுவோம். திடுமென்று ஒன்று நிகழ்ந்து அதற்குப் புதுக் களை ஊட்டி விடும். இந்த விநாடி கூட நான் கல்கத்தாவைப் புதியதோர் உருவில் காண்கிறேன். ஒரே பெண் இன்றைக்கு ஒன்று, நாளைக்கு ஒன்று என்று புத்தாடை அணிந்து புத்தெழில் காட்டி மனுக்குலத்தை நினைவு படுத்துகிறாற்போல் இந்தக் கல்கத்தா நகரமும் நிறம் காட்டிமகிழ்கிறது; மகிழ்விக்கிறது.

அன்று திடீரென்று என்னை யாரோ பின்னாலிருந்து கூப்பிட்டார்கள். கைதட்டி அல்ல; பெயர் சொல்லி! திரும்பிப் பார்த்தேன். யார் என்று இனம் கண்டு கொள்ள முடியவில்லை. "மன்னிக்கணும். நீங்கள் யார் என்று தெரியவில்லையே!" என்றேன்.

"எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? ஒரு முறைக்குப் பின் இரண்டாம் முறை நீங்கள் என்னைப் பார்த்ததே இல்லையே!" என்றான் அவன்.

"உங்களை எங்கே பார்த்திருக்கிறேன்? கொஞ்சம் விளங்கும்படியாகச் சொல்லுங்களேன்!" என்றேன்.

"உங்கள் தெருவிலேயே!" என்றான் அவன்.

"என் தெருவிலேயா? ஞாபகம் வரவில்லையே!"

"நீங்கள் டாலிகஞ்சில் இருந்தீர்கள் அல்லவா?"

"ஆமாம்!"

"அதே தெருவில் சரயு என்று ஒரு பெண் இருந்தாளே, அவளைத் தெரிந்திருக்க வேண்டுமே!"

அப்புறம் எனக்கு எல்லாம் நினைவு வந்து விட்டது. "அது ரொம்பப் பழைய கதை ஆயிற்றே!" என்றேன்.

"பழங்கதை என்கிறதனாலேதான் சொல்கிறேன். பலே கைகாரி அவள். நீங்கள்தான் பார்த்திருக்கிறீர்களே! ஆனால் சார், அவளைப் போல் நன்றி கெட்டவளைப் பார்க்கவே முடியாது. நான் அவளுக்கு எத்தனை நல்லது செய்தேன் என்கிறீர்கள்? அத்தனைக்கும்

பார்த்தியாக என்னை அவன் நடுத் தெருவில் நிறுத்திவிட்டுப் போய்விட்டான் ஐயா!''

எனது ஆர்வம் தலைதூக்கியது. டாலி கஞ்சை விட்ட பிறகு நான் அந்தச் சம்பவத்தை அடியோடு மறந்து போய்விட்டிருந்தேன். எல்லோரையும் போல் வாழ்க்கையில் எனக்கும் எத்தனையோ பிரச்னைகள் இருக்கும் அல்லவா? அவற்றுள் புகுந்து புறப்பட்டு நிமிர்ந்து மூச்சு விடவே எனக்குப் பொழுது சரியாக இருந்தது. யார் யாரைப் போய் நினைவு வைத்துக் கொண்டிருக்க முடியும்?

''வாங்க, ஒரு கப் தேநீர் அருந்திவிட்டுப் போகலாம்!'' என்று அவன் என்னை வற்புறுத்தி அழைத்தான்.

சிறிது நேரத்துக்கு முன்னால்தான் அவன் அந்தத் தேநீர் விடுதியில் அமர்ந்து தேநீர் அருந்தியிருக்க வேண்டும். என்றாலும் அவன் என்னை மீண்டும் அங்கே அழைத்துச்சென்றான்.

அவன் பேச்சைத் தட்ட முடியாமல் நானும் அவனோடு சென்றேன். அந்தத் தேநீர் விடுதியில் நுழையவே எனக்கு என்னவோ போலிருந்தது. என்றாலும் என்ன செய்வது? வேறு வழியின்றி அவனோடு அவன் அழைத்துச் சென்ற இடத்தில் போய் நின்றேன். துருப் பிடித்த தகர நாற்காலி ஒன்றை என் முன்னே இழுத்துப் போட்டு, ''உட்காருங்கள், சார்!'' என்று உபசரித்தான். நான் உட்கார்ந்ததும், ''இந்தத் தேநீர் விடுதிக்கு அதிகமாக யாரும் தேநீர் அருந்த வருவதில்லை. அதனால்தான் நான் இங்கே வருகிறேன். தனிமையில் உட்கார்ந்து பேசுவதற்கு இதைக் காட்டிலும் நல்ல இடம் இந்த நகரம் முழுவதும் தேடினாலும் வேறு எங்கும் கிடைக்காது!'' என்றான். பிறகு கடைக்காரனைக் கூப்பிட்டு, ''டேய் பையா, கேதர்! இன்னொரு கப் தேநீர் கொண்டு வாயேன்!'' என்றான்.

நான் வேண்டாம் என்று எத்தனையோ மறுத்தும் அவன் கேட்கவில்லை. ஒரு கப் தேநீரைத் தருவித்து என் கையில் வைத்த பின்னரே மறு காரியம் பார்த்தான். ''குடியுங்கள் சார்! இதைத் தேநீர் என்றும் சொல்லலாம்; புளித் தண்ணீர் என்றும் சொல்லலாம். சூடாக ஒரு கப் தண்ணீர் உள்ளே போகிறதே. அதற்காக இதை மெச்சிக் கொள்ள வேண்டும். என்ன செய்கிறது, சார்! இப்பொழுதெல்லாம் வருமானம் குறைந்து போய்விட்டது. நல்ல கடையாகப் பார்த்துப் போய்த் தேநீர் வாங்கிக் குடிக்கச் சக்தி இல்லை. இங்கே தேநீர் விஷமாக இருந்தாலும் காசு குறைவாக இருக்கிறதனால் இங்கு தான் வரவேண்டியிருக்கிறது!'' என்றான்.

பிறகு, ''என் பெயர் உங்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன்!'' என்றான்.

''ஆமாம், தெரியாதுதான்!''

''என் பெயர் நிசிகாந்தன். நிசிகாந்த ஹால்தார்!'' என்று கூறியவண்ணம் சட்டைப் பையிலிருந்து மலிவான சிகரெட் பாக்கெட்டை எடுத்தான். ''சார் சிகரெட் குடிக்கிறதுண்டோ?'' என்று கேட்டான்.

''உண்டு. ஆனால் இப்பொழுது தேவையில்லை. நீங்கள் பிடியுங்கள்!'' என்றேன்.

''குடிக்காமல் இருக்கிறது நல்லது தான் — அதுவும் இந்த மட்டமான சிகரெட்டை எவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு விலக்குவது நல்லது! நானும் முன்பெல்லாம் இந்த மாதிரி மட்டரகச் சிகரெட்டைக் கையாலே கூடத் தொடுவதில்லை. வெளி நாட்டு விஸ்கியைத் தவிர மற்றதைக் கண்ணாலே கூடப் பார்க்காமல் இருந்த காலம் ஒன்று உண்டு. இப்பொழுது என்னடாவென்றால் காலம் மாறிப் போச்சு. அதனாலே இந்த நிசிகாந்த ஹால்தார் இப்பொழுதெல்லாம் நாட்டுச் சரக்கையே தான் நம்பியிருக்கிறார். என் கஷ்டத்தை எவரிடம் சொல்லி அழுகிறது? அழுதாலும் தான் அவர்கள் காதில் வாங்கிக் கொள்ளப் போகிறார்களா?'' நிசிகாந்தன் தன் பாட்டைப் பாடத் தொடங்கினான்.

அதைக் கேட்டுக் கொண்டிருக்க எனக்குப் பொறுமை ஏது? எனவே, ''சரயு! இப்பொழுது எங்கே இருக்கிறாள்?'' என்ற கேள்வியைத் தூக்கிப் போட்டு அவன் பேச்சை மாற்ற முயன்றேன்.

''அவள் பேச்சையே எடுக்காதீர்கள், சார்! அவள் ஒரேயடியாகத் தொலைந்து போய்விட்டாள்! நானும் தலைமுழுகி விட்டேன்!'' என்றான் நிசிகாந்தன்.

''என்ன அர்த்தம்?''

''என்ன அர்த்தம்? உருப்படாமல் போய்த் தொலைந்தாள் என்று அர்த்தம். சுத்தக் கழிசடை!''

''நிசிகாந்த பாபு! கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்கள். நீங்கள் சொல்வதன் பொருள் என் மூளைக்கு எட்டவில்லை!'' என்றேன்.

''என்ன சார், இது? ஒரு சாதாரண விஷயம் உங்கள் மூளையிலே ஏறவில்லையென்கிறீர்களே! என்ன காது குத்துகிறீர்களா? நீங்களோ பெரிய எழுத்தாளர். மட்டைக்கு இரண்டு கீற்று என்று உங்களுக்குமா விண்டு உரைக்க வேண்டும்?''

நிசிகாந்தன் என்னை இப்படி வாரிக்கொண்டிருந்த பொழுது வேறு ஒரு வித்தை நிகழ்ச்சி நடந்தது.

ஒரு கிழவர், தெருவோடு போய்க் கொண்டிருந்தவர், நிசிகாந்தனைக் கடையிலே பார்த்ததும் அவனெதிரே வந்து நின்றார். ''நல்ல வேலை பண்ணினீர்களே! நீங்கள் இங்கேயா



உட்கார்ந்திருக்கிறீர்கள்? நான் உங்களை எங்கெல்லாம் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்துவிட்டேன், தெரியுமா? என்ன ஆள் ஐயா நீங்கள்? உங்களைப் போன்ற ஆளை நான் பார்த்ததேயில்லை!'' என்றார்.

நான் மௌனமாக உட்கார்ந்திருந்தேன். நிசிகாந்தனுடைய முகம் பேயறைந்தாற் போல் வெளிறிப் போயிற்று. காட்டுப் பாதையிலே காரிருளில் புலியைப் பார்த்து விட்டால், ஒருவன் எப்படிக் கிலி கொள்ளுவானோ, அப்படி அரண்டு போயிருந்தான் அவன். அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு பதில் சொல்ல வாய்திறப்பதற்குள்ளாகவே, கிழவர், ''நானே பார்க்கிறேன் என்று கூறிவிட்டு ஆன் டிமிக்கி கொடுத்து விட்டீர்களே! இன்று நான் உங்களை விடப் போவதில்லை. என்ன செய்வீர்களோ, ஏது செய்வீர்களோ, எங்கிருந்து கொண்டுவருவீர்களோ, எனக்குத் தெரியாது. எனக்குச் சேரவேண்டிய வாடகைப் பணத்தை வைத்து விட்டு மறுகாரியம் பாருங்கள்! நடவுங்கள் என்னோடு!'' என்றார்.

''இன்று கொஞ்சம் வேலையாயிருக்கிறேன், மல்லிக்ஜீ! இதோ பாருங்கள், இவரிடமிருந்து எனக்குக் கொஞ்சம் ரூபாய் வரணும். அவர் கொடுத்ததும், உங்கள் வாடகையைக் கொடுத்து விடுகிறேன். உங்கள் பணம் எங்கும் ஓடிப் போய் விடாது. கவலைப் படாதீர்கள்!'' என்றான் நிசிகாந்தன்.

நிசிகாந்தனின் பேச்சைக் கேட்ட எனக்கு வானத்திலிருந்து விழுந்தாற் போலிருந்தது.

இவன் என்ன சொல்லுகிறான்?

எனக்குத் தலை சுற்றியது.

வீட்டுக்குச் சொந்தக்காரர் என் பக்கம் திரும்பி என்னை ஒருமுறை ஏற இறங்க நன்றாகப் பார்த்தார். 'நான் யார்? நிசிகாந்த





ஸ்வெட்டர் போடுவதைக் கண்டு பிடித்ததும் முதலில் ஸ்வெட்டர் போட ஆரம்பித்ததும் ஆண்கள்தான்!

'பெமினா' - நிம்மி

னோடு எனக்கு என்ன உறவு? உண்மையில் நான் நிசிகாந்தனிடம் கடன் வாங்கியிருக்கிறேனா, இல்லையா?' என்பதையெல்லாம் தெரிந்துகொள்ள விரும்பினாரோ, என்னவோ?

திடீரென்று பேச்சைத் திருப்பி, ஓர் இக்கட்டான நிலையை உருவாக்கி என்னை எப்படி அசடாக்கி விட்டான் நிசிகாந்தன்! இந்தத் திகைப்பிலிருந்து விடுபட்டுச் சுடச் சுடப் பதில் அளிக்க எனக்கு வெகு நேரம் வாய் ஓடவில்லை.

நிசிகாந்தன் என்னைச் சுட்டிக் காட்டி, ''உங்களுக்கு என் பேச்சில் நம்பிக்கை ஏற்படவில்லை என்றால், இவரையே கேட்டுப் பாருங்களேன்! இவரும் பாவம், கொஞ்சம் சிரமதசையில் இருக்கிறார். அதனால்தான் இவரால் என் பணத்தைக் கொடுக்க முடியவில்லை. இவரைக் குற்றம் கூறிப் பயனில்லை. காலம் கெட்டுக் கிடக்கிறது. பெரிய பெரிய ஆட்களுக்கே பணம் பெயர மாட்டேன் என்கிறது. அந்த நிலையிலே இவரை எப்படி நெருக்குகிறது, நீங்களே சொல்லுங்கள்!'' என்றான்.

''இவர் உங்களுக்குப் பணம் தர முடியுமா, முடியாதா என்பதைப் பார்ப்பது என் வேலை இல்லை. என் வீட்டின் குடிக்கூலிக்காரர் நீங்கள்தான். ஆறு மாதங்களாக வாடகை பாக்கி நிற்கிறது. அதோடு இது சம்பந்தமான கொடுக்கல் — வாங்கல் விஷயம் உங்களுக்கும் எனக்கும் இடையே தானே தவிர இதில் மூன்றாமவருக்கு இடம் இல்லை. நீங்கள் தர வேண்டிய தொகைக்கு இவரை எதற்காகச் சாட்டுதல் போடுகிறீர்கள்? இவர் உங்கள் பணத்தைத் திருப்பித் தர முடியவில்லை என்பதற்காக நான் எதற்காகக் கஷ்டப்படணும்? அல்லது நஷ்டம்தான் படணும்? என்ன சொன்னாலும் நான் இன்றைக்கு உங்களைவிட முடியாது. நீங்கள் என் பணத்தைக் கொடுத்தே ஆக வேண்டும்! வாருங்கள்!'' என்றார் வீட்டுக்கார மல்லிக்.

''நான்தான் சொல்கிறேனே, உங்கள் வாடகைப் பணத்தைக் கொடுத்து விடுகிறேன் என்று! நான் எங்கேயாவது ஓடிப் போய் விடப் போகிறேனா? எதற்காக இப்படி இல்லாதது - பொல்லாதது எல்லாம் சொல்லி உளறுகிறீர்கள்?'' என்று கேட்டான் நிசிகாந்தன்.

''என்ன சொன்னீர்கள்? நான் உளறுகிறேனா?''

''இல்லை; நீங்கள் உளறவில்லை; நான்தான் உளறுகிறேன்! எனக்கு என்ன ஐயா வந்து விட்டது உளறுகிறதற்கு? கண்ணியம் மிகுந்த இவர் சாட்சி. இவரையே கேளுங்கள்! —நீங்கள் சொல்லுங்கள், சார்! 'வாடகைப் பணத்தைக் கொடுத்து விடுகிறேன். கைக்குப் பணம் வந்ததும் தம்பிடி பாக்கி வைக்காமல் கணக்குத் தீர்த்து விடுகிறேன்' என்று நான் அடக்கமாக, வணக்கமாகச் சொன்னேனா, இல்லையா?'' என்றான் நிசிகாந்தன்.

''இந்த மாதிரிப் பேச்சை முன்பே நான் பல தடவைகள் கேட்டிருக்கிறேன்; கேட்டுக் கேட்டுக் காது புளிச்சே போச்சு! இந்தத் தடவை மட்டும் பணத்தைக் கொடுத்துக் கணக்கைத் தீர்க்கவில்லை என்றால், நான் அறைப் பூட்டை உடைத்துப் பெட்டி — கிட்டிகளையெல்லாம் தெருவிலே தூக்கி எறிந்து விடுவேன், ஆமாம்!'' என்றார் மல்லிக் சாஹப்.

நிசிகாந்தன் என் பக்கம் பார்த்து, ''பார்த்தீர்களா சார், இவர் பேசுகிற லட்சணத்தை? நீங்கள் சாட்சி. அவசியம் ஏற்பட்டால் நீங்கள் கோர்ட்டுக்கு வந்து கூண்டு ஏறிச் சாட்சியம் சொல்ல வேண்டியிருக்கும். இவர் அப்படி ஏதாவது ஏடாகூடமாகச் செய்தாரானால், நான் இவர் மீது கிரிமினல் வழக்குத் தொடுப்பேன். என்னை என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் இவர்?'' என்றான்.

''என்ன சொன்னாய்? என் பேரில் கிரிமினல் வழக்குத் தொடுப்பாயோ? அதையும் நான் பார்த்து விடுகிறேன்!'' என்று மல்லிக் சாஹப் சீறினார். தேநீர் விடுதிப் பையன் கேதர் அருகில் வந்து, ''கடைக்குள்ளே கூச்சல் போடாதீர்கள், சார்! கூச்சல் போட வேணுமானால் வெளியே தெருவில் போய் வேண்டிய மட்டும் கூச்சல் போடுங்கள்!'' என்றான்.

'என்ன வேடிக்கை! என்ன சங்கடம்! வீண் வம்பிலே நாம் ஏன் இப்படி அநாவசியமாக வந்து மாட்டிக் கொண்டோம்? இவர்கள் விவகாரத்துக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்?' என்று எண்ணி மெதுவாக எழுந்தேன். ஆனால் நிசிகாந்தன் புறப்பட வொட்டாமல் பிடித்துக் கொண்டான். ''நீங்கள் எங்கே சார் ஓடுகிறீர்கள்? உங்களை நான் சாட்சியாகப் போடப் போகிறேன். கோர்ட்டுக்கு வந்து நீங்கள் உங்கள் கண்ணால் பார்த்ததைப் பார்த்தது பார்த்தபடியே சாட்சியமாகச் சொல்லியாகணும்! இந்த மல்லிக் கிழம் எல்லோருக்கும் எதிரில் என்னை அவமானப் படுத்தி விட்டது. பாருங்கள்! இதைச் சும்மா விடலாமா?'' என்றான்.

வீட்டுக்கார மல்லிக்கும் இலேசுப்பட்டவராக இல்லை. அவன் ஒன்று என்றால் இவர் ஒன்பது என்றார். ''ஆமாம், உன்னை அவமானப்படுத்தத்தான் படுத்தினேன். இன்னும் படுத்துவேன். சொல்லப்போனால் உனக்கு இந்த அவமானம் போதாது. இதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு நீ அவமானப்பட வேண்டும்; ஆயிரம் தடவை பட வேண்டும். என்னைக் கேட்டால் அதுகூடக் குறைச்சல் என்று சொல்லுவேன். வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டாயே, அப்பொழுது உன் அறிவு எங்கே போயிற்று? பெரிதாக வாய் கிழிய என்னவெல்லாமோ அளந்தாயே! ஆயிரம் ரூபாய் சம்பளம், அப்படி — இப்படி என்றாய். அப்பொழுது அழகான பெண்சாதியும் கூட இருந்தாள். இப்பொழுது அந்த மனைவி உன்னை விட்டு விட்டு ஏன் போனாள்? எங்கே போனாள்?'' என்று சாடினார்.

தேநீர்க் கடைப் பையன் கேதர் திரும்பவும் வந்து, ''நீங்கள் கொஞ்சம் பேசாமல் இருங்கள்! சண்டை, அடிதடிகள் வைத்துக் கொள்வதாயிருந்தால், கடைக்கு வெளியே



"தீராத
விளையாட்டுப்
பிள்ளை..."

வசந்த காலம். அன்று,
கண்ணன் ராதைக்கு
விதவிதமாய் அலங்கரித்
தான்.

இன்று நீங்களும்
உங்கள் ராதைக்கு
அலங்கரிக்க இதோ
உங்கள் உம்மிடி சாரதி
ஜுவல்லர்சுக்கு
வாருங்கள். உங்களுக்குத்
தேவையான ஆபரணங்
களைத் தேர்ந்தெடுங்கள்.





# உம்மிடி
# சாரதி
# ஜுவல்லர்ஸ்

40, பாண்டி பஜார்
தி.நகர்.
சென்னை-600017
போன்: 442500

ADWAVE/V S.J/565

வைத்துக் கொள்ளுங்கள் என் கடைக்குள்ளே. இதெல்லாம் வேண்டாம்!'' என்றான்.

நிசிகாந்தனுக்கு எதுவும் தோன்றாமற் போகவே, அவன் கேதரையே சாட்சியாக்கினான்: ''நீயே சொல்லு, கேதர்! நீ அறிவறிந்த பிள்ளை. உனக்குத் தெரியாததில்லை. முடை என்று வந்தால், மனிதர்கள் கடன் வாங்க மாட்டார்களா? உனக்கு எத்தனை கப் தேநீருக்கு நான் காசு பாக்கி தரணும்? அதற்காக நீ என்னை எப்பொழுதாவது மட்டமாகப் பேசி அவமானப் படுத்தியிருக்கிறாயா? ஆமாம், நீ ஏன் அவமானப்படுத்தப் போகிறாய்? நீ நல்ல குடும்பத்துப் பிள்ளை. அதற்குத் தகுந்தபடி நீ நடந்து கொள்ளுகிற முறையும் பெருந்தன்மையாக இருக்கிறது. சின்னவர்களாக இருந்து விட்டால், அவர்கள் நடந்து கொள்ளுகிற முறையும் சின்னத்தனமாகத்தான் போய் விடுகிறது!'' என்றான்.

அதற்குப் பின் என்னைச் சுட்டிக் காட்டி ''இவரைப் பார்க்கிறாய் இல்லை? இவர் ரொம்ப நல்ல மனிதர். நிசமாகவே பெரிய மனம் படைத்தவர். இவர் ஓர் எழுத்தாளர். பாவம், இப்பொழுது இவருக்கு நேரம் கொஞ்சம் சரியாக இல்லை. விஷ கடி வேளையாட்டம், நினைக்கிற காரியம் நினைக்கிறபடி நடக்கிறதில்லை. இவரிடம் என் பணம் அறு நூறு ரூபாய் பாக்கி நிற்கிறது. கையிலே இருந்தால், எப்பொழுதோ தலையைச் சுற்றி விட்டெறிந்திருப்பார். இதோ தசராப் பண்டிகை தலைக்குமேலே வந்து விட்டது. பத்திரிகைகள் மலர் வெளியிடும். கதை — கட்டுரை எழுதுவார். பணம் வரும். வந்ததும் முதற் காரியமாக என் கடனைத் தீர்த்து விடுவார். நானும் என்ன செய்வேன்? உன் கடைக்குத் தர வேண்டிய தேநீர் பாக்கி, மல்லிக் சாஹுப்புக்குக் கொடுக்க வேண்டிய வாடகை பாக்கி எல்லாவற்றையும் தம்பிடி பாக்கி இல்லாமல் தீர்த்து விட மாட்டேனா?'' என்றான்.

அதைக் கேட்டு மல்லிக் சாஹுப் மீண்டும் கொதித்தார். ''கிடக்கட்டும் ஐயா அந்தக் கதையெல்லாம்! யார், எப்பொழுது, எவன் கடனைத் தீர்ப்பான் என்கிற தலைவலி எல்லாம் எனக்கு எதற்கு ஐயா? நீ என் பணத்தை எப்பொழுது கொடுப்பாய், அதைச் சொல்லு!'' என்றார்.

இதற்கு நிசிகாந்தன் என்ன பதில் சொன்னான் என்பதைக் கேட்க நான் அங்கே நிற்கவில்லை. எப்படியோ அவர்கள் பார்வையிலிருந்து தப்பித் தெருவுக்கு வந்து விட்டேன். அவர்கள் சண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்க எனக்கு என்ன பைத்தியமா? நடையைக் கட்டி விட்டேன்.

என்றாலும் நடக்கும்பொழுது நிசிகாந்தனைப் பற்றிய நினைவிலே தான் மிதந்தேன். 'பலே போக்கிரியாய் இருக்கணும் இந்த நிசிகாந்தன்! ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிய படுபாவி! என்னையும் அல்லவா தன் பொறியில் சிக்க வைத்துப் படுகுழியில் தள்ளத் திட்டம் தீட்டி விட்டான்! என்ன துணிச்சல் இருந்தால் நான் அவனுக்கு அறுநூறு ரூபாய் தர வேண்டும் என்று வாய் கூசாமல் பொய் சொல்லுவான்? ஒரு வாய் கஞ்சிக்கு வக்கில்லாத தரித்திரப் பயல்! குடிக்கச் சாராயம் ஒரு கேடா?

'வீட்டுக்கார மல்லிக் எல்லோருக்கும் எதிரில் இவன் மானத்தை வாங்கி நல்ல காரியம் செய்தார்! இந்த மாதிரிப் பயல்களுக்கு எல்லாம் இது வேண்டியதுதான்! பார்க்கப்போனால் இது கூடப் போதாது. நன்றாக 'வாங்கு, வாங்கு' என்று வாங்க வேண்டும்!''

இப்படியெல்லாம் எண்ணியவாறு நான் வெகு தூரம் வந்து விட்டேன். திடீரென்று பின்னாலிருந்து, ''கேளுங்கள், சார் கேளுங்கள்!'' என்ற குரல் வந்தது. (தொடரும்)

# மதுர நாயகி

மதுரை கோயிலில் தினசரி நடக்கும் பூஜைகள்

காலை 5 மணி - திருவனந்தல்
6-மணி தீப ஆராதனை.
6-15 - விளா பூஜை
6-44 - கால சந்தி
10-45 - திரிகால சந்தி.
11-15 - உச்சிகால பூஜை.
மாலை 5-15 - தீப ஆராதனை.
இரவு 8-00 அர்த்தஜாம தீப ஆராதனை (ராக்கால பூஜை)
9 - 30 முதல் } பல்லக்கில் சுவாமி
10 - 15 வரை } அ ம் பா ளி ன்
இடத்துக்கு அழைத்துச் செல்லப்படுகிறார்.

இதன் பிறகு மூக்குத்தி தீப ஆராதனையும் பாத பூஜையும் நடைபெறுகின்றன.

கடைசியாக நடப்பது பள்ளி அறை தீப ஆராதனை.

## 14

**பா**ண்டியன் எக்ஸ்பிரஸ் அன்று திண்டுக்கல் வரையில்தான் எக்ஸ்பிரஸாக வந்தது. அதன் பின் வெறும் பாசஞ்சர்தான். எஞ்சினில் ஏதோ கோளாறு. டிரைவர் பத்து மைல் வேகத்தைத் தாண்ட முயன்றால் போதும். என்ஜின் கோபித்துக் கொண்டு நின்று அடம் பிடிக்கும்.

ஏறத்தாழ ஐம்பது பேர் இருந்த அந்தப் பெட்டியில் பூர்ணத்தைத் தவிர மற்றவர்கள் எல்லாருமே, ரயிலின் இந்தப் போக்கு காரணமாக அலுப்பும் எரிச்சலுமாக வந்து கொண்டிருந்தார்கள். பசியில் சிணுங்கிய குழந்தையைப் பெற்றவள் எரிச்சல் தீர முதுகில் வைத்தாள். குழந்தை 'வீல்' 'வீல்' என்று ஓலமிட்டது. தமக்குக் குழந்தையின் அழுகை என்றால் ஓர் அலர்ஜி என்று எதிரே இருந்த ஒரு பிரயாணி, குழந்தையின் தகப்பனார் காதில் விழ வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் அருகே இருந்தவரிடம் பெருமை அடித்துக் கொண்டிருந்தார். அவருடைய அலர்ஜியை மேலும் அதிகமாக்க வேண்டும் என்ற தாபத்துடன் குழந்தையின் தகப்பனார் இன்னும் குழந்தையை அழவைத்தார். பிறகு அலர்ஜிக்காரரைப் பார்த்து, ''இப்ப என்ன சொல்றே?'' என்ற பாவனையில் சிரித்தார்.

பூர்ணம் தான் ஒரு ரயிலில் பிரயாணம் செய்கிறோம், அந்த ரயில் இரண்டரை மணி நேரம் தாமதமாக ஓடிக் கொண்டிருக்கிறது, சக பிரயாணிகள் எல்லோரும் எரிச்சலில் புகைந்து கொண்டிருக்கிறார்கள் என்ற சிந்தனைகள் ஏதுமின்றி உட்கார்ந்திருந்தான். அவன் கொடைக்கானல் ரோடு வருவதற்கு முன்பேயே கக்கூஸ் தண்ணீரில் குளித்து, பட்டை பட்டையாகத் திருநீறு இட்டுக் கொண்டு பைசா வட்டத்துக்குக் குங்குமத்தையும் இட்டுக் கொண்டாகி விட்டது. நேற்று சென்னையில் இருக்கும்போது திடீரென்று பச்சைப் பட்டுப் புடவை கட்டிக் கொண்டு போன ஒரு பதினெட்டு வயதுப் பெண்ணைப் பார்த்தான். காதில் வைரக் கம்மலும் மூக்கில் வைர மூக்குத்தியும் ஜொலிக்க அவள் புன்முறுவலுடன் இன்னொரு பெண் பேசுவதைக் கேட்டவளாய் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய மரகதப் பச்சைப் புடவையும் முகத்தில் தாண்டவமாடிய ஸ்ரீத்வத்தையும் பார்த்த உடனேயே அவனுக்கு அம்பாளின் – அதுவும் மதுரை மீனாட்சியின் நினைவு வந்து விட்டது. அவ்வளவுதான். மெய் சிலிர்க்க வீட்டுக்கு ஓடினான். ஒரு கைப்பையில் ஒரு நாளுக்குத் தேவையான துணி வகையறுக்களை எடுத்துக் கொண்டான். எழும்பூருக்கு விரைந்தான். அப்போதுதான் நகர்ந்து கொண்டிருந்த பாண்டியன் எக்ஸ்பிரஸில் ஏறினான்.

தனக்கு இந்த உலகில் தெய்வங்களைத் தவிர வேறு யாரும் இல்லை என்ற நினைப்பு அவனுள் தோன்றிப் பல ஆண்டுகளாகி விட்டன. சிறு வயதில் அம்மா அவனை மதுரையில் ஒரு கோவில் பாக்கி வைக்காமல் அழைத்துப் போவாள். எஸ். எஸ். எல். ஸி. தேறுவதற்கு அவன் படிப்பில் செலவழித்த நேரத்தைக் காட்டிலும் கோவிலில் தெய்வத்தின் முன் மன்றாடி நின்ற நேரம் பன்மடங்கு அதிகம்.

அம்மா இறந்து போன பிறகு பக்தி இன்னும் அதிகமாக, ஒரு வெள்ளமாகப் பிரவாகம் எடுத்து ஓடியது. அதில் அவன் மூழ்கி மூழ்கிக் குளித்தான். அவனுடைய போக்கைக் கண்டு தகப்பனார் பயந்தார். இந்தப் பக்தி வேறு எதிலாவது கொண்டு போய் விட்டு விட்டால்? பட்டினத்தாரைப் போல் கரும்புத் தடியைத் தூக்கிக்கொண்டு அவன் வீதிகளில் அலையும் காட்சி அடிக்கடி அவர் கண் முன் தோன்றியது. ஆனால் அவர் செய்த புண்ணியம், அக்காட்சியை நிதர்சனமாகப் பார்க்காமலேயே அவர் போய்ச் சேர்ந்தார்.

பி.வி.ஆர்

அப்பா அதிக சிரமம் கொடுக்காமல் போனது ஓரளவுக்குப் பூர்ணத்துக்குத் திருப்தியாக இருந்தது. வயது காலத்தில் அவரவர்கள் பரமனின் பாதாரவிந்தங்களைச் சேர்ந்துவிடுவதுதான் அழகு என்பது அவனுடைய சித்தாந்தம். தான் ஓர் அநாதையாகி விட்டோம் என்ற துக்கமோ மன வறட்சியோ அவனிடம் பிறக்கவில்லை. இத்தனை நாட்கள் அப்பாவுக்காகச் செலவு செய்த பணத்தைக் கோயில்களுக்குச் செலவு செய்யலாம் என்ற திருப்தி எழுந்தது.

முழுக்க முழுக்க அவன் ஓர் ஐயப்ப பக்தன் என்றுதான் பலர் நினைத்தார்கள். ஆனால் அவனுக்குத் தெரியும், கர்ப்பக் கிருகத்தில் இருப்பது யாராக இருந்தாலும் அவனுக்குச் சம்மதம் என்று கடவுளின் பல அம்சங்கள் பல அழகுகள், பல நோக்கங்கள், பல உருவங்களாகத் தோன்றுகின்றன. ஒவ்வொரு தோற்றத்துக்கும் ஒவ்வொரு பெயர். அவ்வளவுதான். இந்தக் கோட்பாட்டில்தான் இந்து மத தெய்வங்கள் ஆராதனை செய்யப்படுகின்றன. இப்படியெல்லாம் பூர்ணம் நினைத்தான்.

பூர்ணத்துக்கு இப்போது வயது இருபத்தெட்டு. ஐந்தடி எட்டு அங்குலம். நூற்று ஐம்பத்தெட்டு பவுண்ட். நல்ல சிவப்பு நிறம். சுருள் சுருளான தலை முடியை, பழைய கால தியாகராஜ பாகவதர், சின்னப்பா போல் டோப்பாவாக வைத்திருந்தான். (உலகத்தைத் துறந்தவர்கள் மொட்டை அடித்துக்கொண்டும், இன்னும் துறக்காதவர்கள் டோப்பா வைத்துக் கொண்டும் பக்தி மார்க்கத்தில் சென்றார்கள் என்பது பூர்ணத்தின் ஆராய்ச்சி ரீதியான முடிவு.)



இந்தக் கட்டிளங்காளை பாண்டியன் எக்ஸ்பிரஸில் குளித்து, மாற்று வேஷ்டியைக் கட்டிக் கொண்டு அபிராமி அந்தாதியை முணு முணுக்கலாயிற்று.

ரயில் ஒரு வழியாக மதுரையை அடைந்தது. அறுபத்து மூன்றாவது அந்தாதியில் இருந்து அவன் அறுபத்து நான்காவதை முடித்துவிட்டுத்தான் எழுந்திருப்பது என்று அசையாமல் இருந்தான்.

''மிஸ்டர், அந்தாதி... மதுரை!'' என்று நினைவுபடுத்திவிட்டு 'அலர்ஜி' கைப் பையுடன் நகர்ந்தது.

பூர்ணம் இறங்கினான். முதல் பிளாட்பாரத்தை விட்டு வெளியே வந்தபோது, க்யூ மொட்டை தன்னையே பார்த்தவாறு நிற்பதைக் கண்டான்.

''மொட்டே!''

''பூர்ணம்!''

மொட்டையும் பூர்ணமும் தானப்ப முதலி அக்கிரகாரத்தில் நட்ட நடு வீதியில் பலிஞ்சடுகுடு, கோலி, பம்பரம் என்று விளையாடியவர்கள். மொட்டைதான் அந்தக் காலத்தில் அவனுக்கு வழிகாட்டி.

''போன வாரம்தானே வந்தே... மறுபடியும் மீனாட்சி கூப்பிட்டாளா?''

''ஆமாம்ப்பா மொட்டே, வா, போய் ஏதானும் சாப்பிடலாம்.''

''உனக்குப் பசிகூட உண்டா...?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் மொட்டை.

''மதுரையிலே என்ன விசேஷம்!''

''பெரிசா ஒன்றுமில்லே. வேளா வேளைக்கு மணி அடிக்கிறார்கள். பூஜை நடக்கிறது. பைத்தியக்காரக் கூட்டம் ஹரா ஹரான்னு ஓலமிடறது. மதுரையிலே வேறு என்ன விசேஷம்?''

''வா, போகலாம்!''

''ஒரு கண்டிஷன்'' என்றான் மொட்டை.

''என்ன?''

''ஹோட்டல் பில்லை நான்தான் கொடுப்பேன்.''

''யார் கொடுத்தா என்ன, மொட்டை?''

''கரெக்ட். யார் கொடுத்தால் என்ன? நானே கொடுக்கிறேன்.''

டவுன் ஹால் ரோடு வழியாகச் செல்லுகையில், ''மேல மாசி வீதியிலே புதுசா ஒரு ஹோட்டல் வந்திருக்கு. அங்கே போகலாம்'' என்றான் மொட்டை.

''நீ எங்கே சொல்றியோ அங்கே... சாப்பிட்டதும் குளிக்கணும்'' என்றான் பூர்ணம்.

''ஏன் குளிச்சப்புறம் சாப்பிடறது. வீட்டுக்குப் போகலாமா?''

''குளிச்சதும் கோயிலுக்குப் போகணும்... ரயில்லே குளிச்சேன். ஆனால் திருப்தியாயில்லை.''

''ஒரு சமாசாரம் தெரியுமா?''

''என்ன மொட்டை?''

''உன்னோட அத்தை புருஷனுக்கு வேலை போயிடுத்து.''

''யாருக்கு, பலராமனுக்கா?''

''பின்னே யாரு, பலராமனுக்குத்தான்.''

''அடப் பாவமே, என்ன செஞ்சார்?''



''அவர் ஒண்ணும் செய்யலே. கான்சர்.''

''கான்சரா... அடப் பாவமே. இந்த வாட்டி கண்டிப்பா அத்தையைப் பார்க்கணும்.''

''வாயாலேதான் சொல்றே. அன்னிக்கு ஒரு நாள் ரேஷன் கடையிலே மாமியைப் பார்த்தேன். என்ன சொன்னுள் தெரியுமா? பூர்ணம் நெனேச்சா மதுரைக்கு வருவான். ஆனு ஒரு நாள்கூட இப்படி அவலம் கெட்ட அத்தை ஒருத்தி இருக்காளேன்னு அவன் மனசிலே தோன்றதில்லே. 'இப்படிச் சொன்னுள்!''

ஹோட்டல் வாசல்படியில் கால் வைத்துக் கொண்டே, மொட்டை, ''இதுக்குக் காரணம் என்ன தெரியுமா?'' என்று கேட்டான்.

''தெரியாது.''

''இதுவரையிலே நான் யார்கிட்டேயும் சொல்லாததை உன்கிட்ட சொல்லப் போகிறேன். நீ வெளியே மூச்சு விடப்படாது.''

''சரி, மூக்குக்குள்ளேயோ வாய்க்குள்ளேயோ மூச்சு விட்டுக் கொள்றேன்.''

''நான் சொல்லப் போறது ரொம்ப ஸீரியஸ். சிரிக்கறதுக்கு இடமில்லே.''.

இருவரும் உட்கார்ந்தார்கள். சிப்பந்தி வந்தான்.

''நாலு நாலு இட்டிலி, ரெண்டு ரெண்டு சாம்பார் வடை'' என்று மொட்டை சொல்லி விட்டு, ''நீ பேசக் கூடாது'' என்றுன்.

''சரி, நீயே எல்லாம் சொல்லிப் பில்லேயும் கொடு.''

''எல்லா ஊர்லேயும் வடை சாம்பார், இந்த மதுரையிலே மட்டும் சாம்பார் வடை. நீ பார்த்திருக்கியோ, பெரிய அண்டா நிறைய சாம்பார். அதிலே கடச் கட வடையைப் போட்டுடறு... அது பாட்டுக்கு ஊறிண்டே யிருக்கு.''

''நன்னு ஊறினப்புறம் நம்ம வயத்திலே கரையறது.''

மொட்டை திடீரெனச் சிரித்தான்.

''ஏன் சிரிக்கறே?''

''உன்னைப் பத்தி நினைச்சேன்.''

''விஷயம் என்ன?''

''பக்தி சாம்ராஜ்யம் என்னும் சாம்பாரிலே பூர்ணம் என்கிற ஒரு வடை ஊறி ஊறிக் கடைசியிலே பகவானுடைய பாத கமலங் களிலே ஜீர்ணமாகிறது.''

''சபாஷ்!''

சொன்னவன் மெய் மறந்து போய்க் கண்களை மூடினான்.

''பூர்ணம், உன் பக்தியைக் கோவில்லே காட்டு. நாலு பேர் பார்த்து ரசிப்பா...இது ஹோட்டல்.''

''ஆமாம்.''என்ற பூர்ணம் தொடர்ந்தான்.

''ஏன் தெரியுமா நான் இப்பவெல்லாம் அத்தை வீட்டுக்கு அதிகம் போறதில்லே?''

''சொல்லு.''

''ஏழெட்டு மாசத்துக்கு முன்னாலே என் அப்பா போனாரோ இல்லியோ... அப்ப அத்தை மெட்ராசுக்கு வந்திருந்தா...''

''அப்போ ஏதானும் சண்டை நடந்ததா..., சீதாமணி மாமி நல்லவளாச்சே... துக்கத் துக்குப் போன இடத்தில் சண்டை எதுவும் பிடிக்க மாட்டாளே!''

''அவசரப்படாதே... அப்பாவோடு காரி யங்க ளெல்லாம் முடிஞ்சு, சுபசுவீகாரமும் நடந்தாச்சு. அன்னிக்குச் சாயங்காலம் ஒரு நாலு மணி இருக்கும். நானும் அத்தையும் மாத்திரம்தான் இருந்தோம்.''

''என்னடா, சினிமா எழுத்தாளன் ப்ரொ ட்யூஸருக்குக் கதை சொல்றமாதிரி சொல்றே. டைரக்டா பாயிண்டுக்கு வாயேன்.''

''சரி. அத்தை சுவர்லே சாய்ஞ்சு நின்னுண் டிருந்தா. நான் கீழே உட்கார்ந்திருந்தேன்.''

''அப்ப ஒரு கருந் தேள் உன்னைப் பார்த்து வந்ததாக்கும். அதை லாங்-ஷாட்டிலே எடுத்தா நன்னாயிருக்காது... க்ளோஸ் அப்லே எடுக்கணும். அப்பத்தான் தேளின் பயங் கரம் நன்னா வரும்.''

''மொட்டை, என் தாட்ஸ் கலையறது. பேசாமல் இரு... அத்தை என்ன பண்ணி னான்னு கேட்டா, திடீர்னு 'பூர்ணம்'னு கூப்பிட்டா. அதை நான் எதிர்பார்க்கலியா, ஒரு நிமிஷம் அசந்து போயிட்டேன்.''

''இந்த இடத்திலே மூவ்மெண்ட் கொடுத்து எமோஷனைக் காட்டணும்.''

''நான் உட்கார்ந்திருக்கேனே எப்படி மூவ்மெண்ட் கொடுக்கறது? ஆனா எமோஷன் என்னை அறியாமலே வந்தது.''

''உம், சொல்லு. மாமி, திடீர்னு உன்னைப் 'பூர்ணம்'னு கூப்பிட்டா. நீ எமோஷனோடு அசந்து போனே. அப்புறம்?''

''அத்தை என்ன சொன்னாள் தெரியுமா? 'பூர்ணம், இப்ப உன் அப்பாவும் போயாச்சு. நீயும் நல்ல வேலையிலே நாலு காசு சம்பா திக்கறே. ரயில்வே குவார்ட்டர்ஸ் வேறே இருக்கு.!. உனக்கு வெந்நீர் வச்சுத் தர ஒருத்தி வேண்டாமா?' இப்படிக் கேட்டா.''

''இப்படியே கேட்டாளா?''

''ஆமாம்.''

''பூர்ணம். எனக்கு ஒரே ஒரு சந்தேகம். ஏன் எல்லா அம்மாக்களும் பிள்ளைகள் கிட்டே வெந்நீர் போட்டுத் தர ஒருத்தி வேண்டாமான்னு கேட்கிறா? வேறே ஏதா னும் கேட்கப்படாது?''

''சீதாமணி அத்தை எனக்கு அம்மா இல்லே... மொட்டை, எனக்கு இப்பத்தான் சடார்னு புரிஞ்சுது. எதுக்காக அத்தை இப்படி ஒரு கேள்வியைக் கேட்டான்னு. அதுக்கப்புறம் ஒரே ஒரு தடவைதான் நான் இங்கே அத்தை வீட்டுக்குப் போனேன்.''

''உனக்கு என்ன புரிஞ்சுது; பூர்ணம்?''

''அத்தைக்கு ரெண்டு பொண். சங்கரி...''

''லாவண்யான்னு.சொல்லு. அவ காதிலே விழுந்தா அவ்வளவுதான்.''

''சரி...லாவண்யா, அப்புறம் நீலா.... இப்படி இரண்டு பொண்கள்.''

''இதை ஏன் எனக்குத் தெரியாதது மாதிரி என்கிட்டே சொல்றே?''

''இந்த ரெண்டிலே ஒண்ணை என் தலையிலே கட்டிடணும்னு அத்தைக்கு உள்ளூற ஆசை!''

''பூர்ணம், சும்மா சொல்லப்படாது.... உன்னோட பக்தி சாதாரண பக்தி இல்லே. ரொம்ப சூடான பக்தி. அதிலே உன் மூளை கரைஞ்சுடுத்து.''

''மொட்டே.''

''சீதாமணி மாமி ஒரு நாளும் நீ நினைக்கிற மாதிரி தன் பெண்களை மனசிலே வைச் சுண்டு இந்த வெந்நீர்க் கேள்வியைக் கேட் டிருக்க மாட்டா.''

''நீ எப்படிச் சொல்றே?''

''அவளுக்கு அவ பெண்களோட குணம் தெரியும்.''

''ஏன், அவா குணம் மோசமா?''

''உன்னைக் கல்யாணம் பண்ணிண்டு உன் னோடு கோவில் கோவிலா நுழைஞ்சுண் போய்க் கடைசியிலே வெந்நீர் போட்டுத்தர அளவுக்கு அவர்களுக்குப் பைத்தியம் பிடிக்கவில்லே.''

''அப்படீன்னா?''

''சீதாமணி மாமி ஒத்தைக் கால்லே நின் னாலும் லாவண்யா உன்னோடு மணையிலே உட்கார மாட்டா... ரமணி ரமணின்னு ஓர் அட்வகேட் இருக்கான். நீ கூட ஒரு தரம் பார்த்திருக்கே. பெரிய பணக்காரன். அவன் மாலையும் கையுமாத் தயாரா இருக்கான்... பயப்படாதே!''

''அப்போ நீலா...''

''நீலாவை எனக்குப் பண்ணி வைக்க ணும்னு எங்க அம்மா துடிக்கறா... ஆனால் நல்ல வேலை கிடைச்சாத்தான் அதைப் பத்தி யோசிக்கணும்.''

''அப்ப அத்தை வீட்டுக்குப் போறதிலே ஆபத்து இல்லேங்கிறியா?''

''சீதாமணி மாமிக்கு இனிமேல் புதுசா ஒரு பெண் பொறந்தாத்தான் நீ பயப்பட ணும்... ஆனா பாவம், இனிமே பொறக்காது. இப்ப நீயும் நானும் என்ன செய்யறோம்... நேரே காக்காத் தோப்புக்குப் போறோம்... போறதுக்கு முன்னாடி கை நிறைய பூவும் பழமும் வாங்கிண்டு போகலாம்... நீ பூவோடு போனா, மாமி மனசுக்கு இதமாயிருக்கும்.''

''குளிச்சுக் கோயிலுக்குப் போயிட்டு அப் புறம் போகலாமே.''

''நீ இன்னிக்கு உன் அத்தை வீட்டிலேயே குளிச்சுச் சாப்பிடப் போறே... சீக்கிரம் காப்பியைக் குடி.''

இவர்கள் சீதாமணி வீட்டை அடையும் போது மணி பத்தே முக்கால். திடீரென்று மொட்டை நின்றான். வீட்டு வாசலில் அவன் கண்ட காட்சியை அவனாலேயே நம்ப முடியவில்லை.

(தொடரும்)

# இலவசம்

## டர்கிஷ் பாத் சோப்*—
## திறம்பட துலக்கும்

# பிஜ்

## வாங்குகையில்!







உன்னத தயாரிப்பான பிஜ்: திறம்பட துலக்கிடும். நுரை கொழித்திடும். உங்கள் அடுக்களைப் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், தரைகள், குளியலறை பீங்கான்கள் (சானிடரிவேர்) அனைத்தும் இதுவரை காணாத பளபளப்பை பெறுகின்றன!

**முந்துங்கள்! ஸ்டாக் இருக்கும் வரையே இவ்வாய்ப்பு கிட்டும்!**

வழக்கம் போல் 3 கிலோ பாக்கும் கிடைக்கிறது.

CMGS-95-172 TM



# அழகுக் குறிப்புகள் ஆறு

(1) சருமம் வெண்மையாக: ஒரு ஸ்பூன் வெள்ளரிப் பிஞ்சின் சாற்றில், சில துளி எலுமிச்சம்பழச் சாறும், ஒரு சிட்டிகை மஞ்சள் பொடியும் கலந்து முகத்தில் பூசி அரை மணி நேரம் ஊற வேண்டும். பிறகு பச்சைத் தண்ணீரில் முகம் கழுவி விட வேண்டும். வாரம் இரு முறையேனும் இப்படிச் சில மாதங்கள் செய்து வந்தால் கருமை நீங்கி வெள்ளையாகலாம்!

(2) சருமம் மென்மையாக: குளிக்கப் போகுமுன் வெண்ணெயில் சிறிது எடுத்து முகத்தில் நன்றாகத் தேய்த்துச் சிறிது நேரம் ஊறிய பிறகு கடலை மாவினால் முகத்தைக் கழுவினால் சருமம் மென்மையாகும்.

(3) தழும்பு மறைய: பருக்களினால் ஏற்படும் தழும்பு மறைய எலுமிச்சம் பழச் சாற்றில் சம அளவு தேங்காய் எண்ணெயும், சந்தனமும் கலந்து இரவில் பூசி வந்தால் தழும்பு மறையும்.

(4) கூந்தல் அழகுக்கு: தலையில் நன்றாக எண்ணெய் தேய்த்து விட்டு அப்புறம் ஓர் எலுமிச்சம் பழம் அறுத்துப் பிழிந்து அதன் மேல் தடவிவிட்டுப் பத்து நிமிஷங்களுக்குப் பிறகு ஷாம்பூ போட்டுக் குளித்தால் கூந்தல் பார்க்க அழகாக இருக்கும்.

(5) உடல் பருமன் குறைய: நன்கு பழுத்த எலுமிச்சம் பழத்தின் சாறு இரண்டு அவுன்சு, தேன் அரை அவுன்சு — இரண்டையும் ஒரு டம்ளர் கொதித்த நீரில் கலந்து இளஞ்சூட்டுடன் காலையில் வெறும் வயிற்றில் அல்

# மகளிர் பகுதி



### வோட்டுக் கிடையாது போ!

எங்கள் வீட்டு மதில் சுவரில் "நோட்டீஸ் ஒட்டாதே" என்ற அறிவிப்பும் பலகை ஒட்டி இருக்கிறோம். இருந்த போதிலும் தேர்தல் விளம்பர வேகத்துக்குத்தான் தடுப்பு அணை கிடையாதே! எங்கள் தொகுதி வேட்பாளர் ஒருவரை ஆதரித்து "கதிர் அரிவாள் சின்னத்துக்கு வோட்டளியுங்கள்" என்று மதில் சுவரில் விளம்பரம் செய்துவிட்டனர்.

பள்ளியில் பயிலும் எனது சுட்டி மகன் செந்தில் அதைப் பார்த்து எங்களிடம் கோபத்துடன் முறையிட்டான். நாங்கள் ஏதோ பேச்சு மும்முரத்தில் அவன் பேச்சை அசட்டை செய்து விட்டோம். உடனே அவன் ஒரு கரிக் கட்டியை எடுத்து அந்த விளம்பரத்துக்கு மேல், "ஏன் இங்கு எழுதினாய்? உனக்கு எங்கள் வோட்டுக் கிடையாது, போ!" என்று எழுதி வைத்திருக்கிறான். இதைக் கண்ட எங்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

-ஆர். மல்லிகா

# சாக்லேட் செய்யும் முறை

தேவையான சாமான்கள்:

| | | |
|---|---|---|
| கன்டென்ஸ்ட் மில்க் | 1 | டின் |
| வெண்ணெய் | 100 | கிராம் |
| சர்க்கரை | 1 | ஆழாக்கு |
| கோகோ | 2 | டேபிள் ஸ்பூன் |

செய்முறை: பால் டின்னைத் திறந்து அதிலுள்ளதை ஒரு கனமான அடியுள்ள பாத்திரத்தில் கொட்டிக் கொள்ளவும். டின்னின் அடியில் ஒட்டிக் கொண்டுள்ள பாலைக் கை விரலினால் வழித்து எடுத்து விடவும். விரலில் ஏற்படும் கிறல்களை உடனடியாக அலம்பி 'பர்னல்' தடவிக் கொள்ளவும். பாத்திரத்தை அடுப்பில் ஏற்றி, வாசலில் சிறிது நேரமாகக் கத்திக் கொண்டிருக்கும் பழக்காரனிடம் பேரம் பேசி வியாபாரத்தை முடித்துவிட்டுக் கதவைச் சாத்திவிட்டு அடுப்படிக்கு வரவும். வெண்ணெய் சர்க்கரை கோகோ முதலியவற்றைப் பாத்திரத்தில் போட்டு எல்லாவற்றையும் சேர்த்துக் கிளறி விடவும். காஸ் தீர்ந்து அடுப்பு எரியாமல் போனதும் சபித்துக் கொண்டே காஸ் கடைக்கு போன் செய்து உடனடியாக சிலிண்டர் கொண்டுவரச் சொல்லவும். அதற்குள் அடியில் உள்ள ஸ்டவ்வைத் துடைத்து மண்ணெண்ணெய் விட்டு நிரப்ப எண்ணெய்ப் பாட்டிலைத் தேடவும். எண்ணெய் சொட்டுக் கூட இல்லாதது கண்டு காஸ் வருகிறதா என்று வாசலுக்கும் உள்ளுக்குமாக அலையவும். காஸ் வந்ததும் பாத்திரத்தை மீண்டும் அடுப்பில் ஏற்றிக் கிளறிக்கொண்டே இருக்கவும். காலிங் பெல் ஒலி. பேப்பர் பணத்துக்காகப் பில்லுடன் வந்திருப்பவனுக்குப் பணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டு அடுப்படிக்கு வந்து கிளறி விடவும். இதற்குள் ஒன்றாவது படிக்கும் மூத்த பிள்ளையும், நர்சரியிலிருந்து இரண்டாவது பெண்ணும் பள்ளியிலிருந்து வந்ததும் அடுப்பைச் சிறிது நிதானமாக விட்டு அவர்களுக்குச் சாப்பாடு எடுத்து வைத்து விட்டு மீண்டும் சாக்லேட் கலவையைக் கிளறவும். ஒரு மைசூர் பாகுத்



# நாயகியின் துணை



கார்மேகம் போலிருக்கும் காண்போரைக் கவர்ந்திழுக்கும்
தேர்போகும் சாலைபோன் நீலையலையாய் பரந்திருக்கும்
ஏர்போகும் வழியாக ஏற்றதொரு பிரிவிருக்கும் —
சீர்போகும் செழுங்கூந்தல் சீராட்ட மறக்கின்.

காதோரம் இதழ்குவித்து காதல்மொழி பேசும்போது
காவியம் புகழ்கூந்தல் காளைதன் தடையாம்
மாதோடு பிறந்தமணம் மயக்குவது போதாதென்று
குழலோடு குடியிருக்கும் மல்லிகையும் கூடவரும்!

இடைதழுவிக் கீழிறங்கும் இளையமகள் கருங்கூந்தல்
நடைநழுவும் நாயகன்தன் கண்களுக்கோர் காவலாம்
உடைமறைக்கு மழகுதனைத் தான்மறைக்கும் கூந்தல்தனை
தடைவிதிக்கும் அடவியென அடலேறும் அறிவதில்லை.

நடையில் சதிராடும் நளினமிகு கூந்தல்
இடையின் இரண்டுபக்கம் இங்குமங்கும் நின்றாடுமிக்
காட்சி கண்டகாளையவன் கணத்தில் வீழ்ந்ததை
சாட்சி சொல்லியாடும் சாகசமிகு கூந்தல்!

நாணம் காட்டிட நாயகிக்கோர் துணையாமே
நளினம் மிகுவிரல் நடனமாடும் மன்றமாமே
தழுவாத முந்தானை தழுவிடுமச் செழுங்கூந்தல்
நாயகன் தோளணைக்க நாயகிக்குத் துணையாமே!

—சா. டென்சிரானி

வது இரவு ஆகாரத்துக்குப் பிறகு பருகி வரக் கொழுப்புச் சத்து குறையும்.

வெள்ளை நிறமான வெங்காயத்தை நெய்யில் வறுத்து எடுத்து அதனுடன் பனங் கற்கண்டைச் சேர்த்துக் காலை மாலை இரு வேளையிலும் ஐந்து கிராம் சாப்பிட்டு வந்தால் உடலில் தேவையற்ற சதை குறையும்.

(6) லிப்ஸ்டிக் உலராதிருக்க: லிப்ஸ்டிக் பூசுபவர்கள் உதடு உலராமல் இருக்க லிப்ஸ்டிக்கைப் பூசியவுடன் ஐஸ்கட்டியை உதட்டின் மேல் வைத்து அழுத்தி எடுத்தால் லிப்ஸ்டிக் நாள் முழுதும் கலையாமல், உலராமல் இருக்கும்.

—அனுஷா

## "நேள பஜே"

சென்ற டிசம்பர் மாதம் சேலம், சாரதா கல்லூரியில் அகில இந்திய பெண்கள் மகாநாடு நடைபெற்றது.

டெல்லியிலிருந்து' வந்திருந்த ஓர் அம்மையாருக்கு ஹிந்தியைத் தவிர வேறு மொழி எதுவும் தெரிந்திருக்கவில்லை. அடுத்த அறையில் இருந்த அக்கல்லூரியைச் சார்ந்த ஒருவரை அணுகி 'காப்பி எப்போது' என்று கேட்டிருக்கிறார். ஹிந்தியைப் புரிந்து கொண்ட அவரால் 'நௌ' (இப்போது என்று ஆங்கிலத்தில்தான் பதில் சொல்ல முடிந்திருக்கிறது. அவ்வம்மையாரோ 'நௌ பஜே' (ஒன்பது மணிக்கா) என்று கேட்டுவிட்டு முகத்தைச் சுளித்துக் கொண்டு சென்று விட்டார். இவர் அவர் பின்னால் ஓடிச் சென்று 'நோ நோ நௌ' (இல்லை இல்லை. இப்போதே) என்று ஜாடை செய்த தோடு அவர் கையைப் பிடித்துக் கொண்டு டைனிங் ஹால் சென்று காப்பி வாங்கிக் குடிக்க வைத்தார்!

'சாய்ராம்'



தட்டில் சிறிது வெண்ணெயைத் தடவி வைக்கவும். சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே வாய்ச் சண்டையிடும் குழந்தைகளைக் கடிந்து கொள்ளவும். போன் அலறவே போய்ப் பேசிவிட்டு வரவும். மாலை டிபனுக்கு இரு தோழர்களை அழைத்து வருவதாகக் கணவன் கூறியதைக் கேட்டு முணுமுணுத்தபடியே மீண்டும் அடுப்படிக்குப் போய்க் கிளறி விடவும். 'டமார்' என்ற சத்தம் கேட்க வரவேற்பறைக்கு ஓடவும். அலங்காரமாக வைத்திருந்த பூஜாடி குழந்தைகளின் கண்ணாமூச்சி விளையாட்டுக்குப் பலியாக நொறுங்கிக் கிடக்கும். அதன் கண்ணாடித் துண்டுகள் குழந்தைகளின் காலில் குத்திவிடாமல் இருக்க உடனடியாகப் பெருக்கிச் சுத்தம் செய்து விடவும். மீண்டும் அடுப்படிக்குப் போகவும். வழியில் பெண் குழந்தை நீங்கள் அஜாக்கிரதையாக மேஜை மேலேயே வைத்திருக்கும் பார்லை முழுவதையும் பிதுக்கி முகம், கைகள் முழுவதும் அப்பிக் கொண்டிருக்கும். அவளை நாலு சாத்து சாத்திவிட்டு வாஷ்பேஸினுக்கு இழுத்துச் சென்று சுத்தம் செய்து துடைத்து விடவும். கைக்குழந்தையின் அலறல் கேட்கும். போக்கிரிப் பையன் மூத்தவன் கைக் குழந்தையின் கன்னத்தைக் கிள்ளிப் பதம் பார்த்துச் சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கக் கண்டால் அவனை ஆக்கிரத்துடன் இழுத்து அடிக்கக் கையை ஓங்கவும். அதற்குள்... இது என்ன ஒரு மாதிரியான கரிந்த வாசனை வருகிறதே! விநாடிக்கு விநாடி நாற்றமாகிப் பரவுகிறதே!

ஓடிச் சென்று அடுப்பை அணைத்துவிட்டுப் படுக்கை அறைக்குப் போய்க் கட்டிலில் தொப்பென்று விழவும்.

—முத்துலக்ஷ்மி-வைத்தியநாதன்

போஷாக்குத்
துள்ளி எழ
அதிக கோகோ

புதிய

# போர்ன்விடா

மற்றெந்த மால்ட் செறிந்த ஆரோக்கிய உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் என்றுமே அதிக கோகோ சேர்க்கப்பட்டுள்ளது. இப்பொழுதோ, போர்ன்விடாவில் முன்னைக் காட்டிலும் அதிக போஷாக்கும் அதிக இன-சுவையும் அளித்திட, அதிக கோகோ அடங்கியுள்ளது.

போர்ன்விடாவிலுள்ள கோகோவில், இரத்த அமைப்புக்கு அவசியமான இரும்புச் சத்து நிறைந்துள்ளது மற்றும் வைட்டமின்கள் 'பி' மற்றும் 'டி'யும் கால்ஷியம், பாஸ்பரஸ்.




காட்பரிஸ்

# போர்ன்விடா

சிறப்பான
சுவையூட்ட
அதிக கோகோ

# முன்னைக்காட்டிலும் அதிக கோகோவுடன்.

சோடியம், பொட்டாஷியம் போன்ற விலை மதிப்பற்ற கனிம உப்புகளும் அடங்கியுள்ளன. அவை மட்டுமா? போஷாக்கு தரும் நற்பண்புகள் அடங்கிய, மால்ட், பால் மற்றும் சர்க்கரை போர்ன்விடாவில் மண்டிக் கிடக்கின்றன. ஒரு கப் சூடான பாலில் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா கலந்து, இன்சுவையுள்ள போஷாக்கைப் பருகுங்கள்.

உங்கள் செல்வங்களுக்கு தினமும் இருவேளை போர்ன்விடா வழங்குங்கள். அவர்களுடைய உடல் சீராக வளரத் தேவையான, அசாதாரண போஷாக்கைத் தந்து உதவுகிறது அது. ஏன், அவர்களுடன் ஈடுகொடுக்க, உங்களுக்கும் அது தேவை.

## 75 பைசா மிச்சம்

போர்ன்விடா 450 கிராம் ரீ:பில் பேக் வாங்கி, 75 பைசா மிச்சப்படுத்துங்கள்! இந்தப் பேக்கைத் திறந்தவுடனே, வழக்கமான போர்ன்விடா டின்னில் அதை நிரப்பி, புதுமை கெடாமல் பாதுகாருங்கள்.




**அதிகப்படியான கோகோ, அதிகப்படியான வலிமை, அதிகப்படியான இன்சுவை**

OBM 6714 TM

# சண்டை

சிவசங்கரி

அவன் அன்றைக்கு வீட்டுக்கு வரும்போது அவள் முகத்தை ஒன்றரை முழத் துக்குத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தாள்.

அன்று அவர்களுக்கு மாச 'வெட்டிங்–டே' – அதாவது அன்றோடு அவர்களுக்குத் திருமணமாகி மூன்று மாசம் முடிகிறது.

கல்யாணம் நடந்த அன்றே அவனும் அவளும் தீர்மானித்து விட்டார்கள். வீக்லி வெட்டிங் டே, மன்த்லி வெட்டிங் டே என்று முதல் ஒரு வருடம் கொண்டாடி ஒரு லட்சியத் தம்பதியாய் இருக்க வேண்டும் என்று. அதன்படி திருமணமான புதன்கிழமை ஒவ்வொரு வாரம் வரும்போதும் சினிமா, ஹோட்டல் என்று உல்லாசமாகக் கழிப்பார்கள் – மாசத் திருமண நாள் அன்று அவளுக்கு அவன் பரிசுப் பொருட்கள் வாங்கிச் சந்தோஷிப்பான். முதல் மாச வெட்டிங் டே அன்று அமெரிக்கன் ஜார்ஜெட் புடவை. இரண்டாம் மாச தினத்தில் முதலைத் தோல் பை இப்படி –

இன்று என்ன வரப் போகிறது என்று காலையிலிருந்தே அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

''சாயங்காலம் தயாராக இரு – நான் வந்ததும் வெளியில் போகலாம் – அங்கு உனக்கு ஒரு ஸர்ப்ரைஸ்'' என்று அவன் காலையில் சொல்லிச் சென்றான்.

ஐந்திலிருந்து இவளும் தயாராய் இருக்கிறாள். அவனைத்தான் காணோம் –

அலுவலகத்துக்குக் கூட ஃபோன் பண்ணி விட்டாள். மதியம் லீவு போட்டு விட்டுப் போனவன்தானாம். எங்கே போனார்?

நேரம் ஆக ஆக அவளுக்குக் கற்பனை எதுவும் தோன்றாததால், ஏமாற்றம் மட்டும் எழ, முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டாள்.

அவன் ஐ. ஐ. டி.யில் படித்து, அழகப்பா காலேஜில் எம்.பி.ஏ.வும் பாஸ் பண்ணிய... 



அவனும், அவளும் சந்தித்துக் கொண்ட போது தாங்கள் ஒருவர் மேல் ஒருவர் தீவிரக் காதல் கொண்டிருப்பதாக உணர்ந்தார்கள்.

பத்து நாட்களுக்குள் பம்பாயில் இருந்த அவளது பெற்றோரை அவன் சந்தித்தான்.

'உங்கள் மகளை நான் மணக்க ஆட்சேபனை உண்டா?' என்றான்.

பம்பாயின் நாகரிகக் கூட்டத்தைச் சேர்ந்த அவர்களுக்கு இந்தச் சம்பந்தம் பிடித்துப் போய் விட்டது!

'மே காட் ப்ளெஸ் யூ சில்ரன்' என்று முதல் சந்திப்பிலேயே 'தொட்'டென்று வாழ்த்தைக் கையில் தந்து விட்டார்கள்.

அவனுக்கு அம்மா கிடையாது — அப்பா மட்டும்தான்-கல்கத்தாவில் பெரிய அதிகாரி-அவன் ஒரே பையன்.

சேதி தெரிந்ததும் 'ஆல் தி பெஸ்ட் மை பாய்' என்று அவரும் வாழ்த்தைத் தெரிவித்து விட்டார்.

கல்யாணம் பம்பாயில் — இரண்டாம் நாளே சென்னைக்கு அவனும், அவளும் பறந்து வந்து புதுக் குடித்தனம் தொடங்கினார்கள்.

முதல் இரண்டு மாசங்களை வீட்டை அலங்கரிப்பதிலும், அதற்குத் தேவையான பர்னிச்சர், கர்டன் வாங்குவதிலும், புது நண்பர்களைச் சேகரிப்பதிலும், வெளியில் விருந்து, கேளிக்கைகளுக்குப் போவதிலும், அழகை ப்யூட்டி பார்லர்களுக்குப் போய்ப் பராமரிப்பதிலும் அவள் செலவழித்தாள்.

மூன்றும் மாசம் இதெல்லாம் அவள்—பொழுதை நிரப்ப முடியாமல் போனதால், 'மறுபடியும் வேலைக்குப் போக வேண்டும்' என்று அவளே தீர்மானித்து உடனடியாய், மும்முரமாய், வேலை தேடியதில் மனசுக்குப் பிடித்த நிறுவனில் வேலை கிடைத்து விட்டது. வருகிற முதல் தேதியிலிருந்து அவள் போக வேண்டும்.

மணி ஏழரையைத் தாண்டியதும் அவளின் கோபம் தாங்க முடியாததாகப் போயிற்று.

'ஹௌ இர்ரெஸ்பான்ஸிபிள்! -ஒரு போன் பண்ணக் கூடாது? அப்படி என்ன வேலை? என்னைக் காக்க வைத்து விட்டு'.

மேலும் அரை மணி ஆன சமயத்தில் அவன் வெள்ளை ஃபியட் காம்பௌண்டுக்குள் நுழைந்தது.

அவள் மாடி பால்கனியை விட்டு இறங்கவேயில்லை.

அவன் மாடி ஏறி வந்தான்.-ப்ரீஃப் கேஸைப் படுக்கையில் போட்டு விட்டு அவள் பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான் — கால் ஷூவைக் கழற்றாமல் மேஜையின்மேல் தூக்கிப் போட்டுக் கொண்டான்.

'கும்'மென்று வெளிநாட்டு விஸ்கி வாசனை!

அவள் கோபமாக இருப்பதையோ, அவளைக் காக்க வைத்து விட்டுத் தாமதமாக வந்ததையோ அவன் உணர்ந்ததாகவே தெரியவில்லை.

''மீர்சந்தானி வந்திருந்தான் — அவனும் ஆஷாவும் பிரிந்து விட்டார்களாம். தே வாண்ட் டிவோர்ஸ்'' என்றான் மெல்ல.

அவன் சொன்ன விஷயம் அவளுக்கு அதிர்ச்சி தருவதாக இருந்தது.

ஆஷா மீர்சந்தானியை அவளுக்கு நன்றாகத் தெரியும். மீர்சந்தானிக்குப் பெங்களூரில் வேலை. ஆஷா பம்பாயைச் சேர்ந்த பணக்காரி-ஐந்து மாசங்களுக்கு முன்னால் தான் அவர்கள் காதலித்து மணம் செய்து கொண்டார்கள்.

அவர்களா பிரிந்து விட்டார்கள்?

தன் கோபத்தைக் கூட மறந்து விட்டாள்.

'வாட்?'.—

''யா — மீர்சந்தானி மத்தியானம் ஆபீஸுக்கு வந்திருந்தான் — மூஞ்சியும், முகரையும் பார்க்கச் சகிக்கவில்லை. காலை நேரத்திலேயே நல்ல குடி. — உன்னோடு பேச வேண்டும் என்று அழுதான் — மத்தியானத்திலிருந்து அறையில் அவனோடு ஹோட்டல் அறையில் தான் இருந்தேன் — புவர் மேன்.''





### சோளிங்கபுரத் தெப்போற்சவம்

ஒவ்வொரு புண்ணியத் தலமும் மூர்த்தி, தீர்த்தம் போன்றவற்ருல் தனிச் சிறப்புறுகிறது. சோளிங்கர் என்று வழங்கும் கடிகாசலம் தனிச் சிறப்புக் கொண்டதோடு ஸ்ரீ யோக நரசிம்ம ஸ்வாமியையும் ஸ்ரீ யோக ஆஞ்சநேய ஸ்வாமியையும் திவ்ய மூர்த்திகளாகப் பெற்றது. பிரம்ம தீர்த்தம் என்னும் தக்கான் குளமோ தீர்த்தப் பெருமை பெற்றது. இப்போது இப்பிரம்ம தீர்த்தம் திருப்பணி காரணமாகப் புத்தெழில் பெற்று நீர் நிறைந்து கவினுறு காட்சி அளிக்கிறது. ஸ்வாமி தக்கானுக்கு ஆண்டுதோறும் தை மாதத்தில் இக் குளத்தில் மூன்று நாட்கள் தெப்ப உற்சவம் நடைபெறும். இது கண்ணுடையவர் காண வேண்டிய ஒன்று.

இத்தெப்ப உற்சவம் ஆண்டுதோறும் தை மாத ஏகாதசி, துவாதசி, திரயோதசி திதிகளில் சிறப்புற நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

---

''என்ன சமாசாரமாம்?'' —

''ஒரு மாசமாக இரண்டு பேருக்கும். காரணமில்லாமல் சண்டை எழுந்து, பெரிதாய்ப் போயிருக்கிறது. இனி தாங்க முடியாது என்று பிரிந்து விட்டார்கள்.''

''சண்டைக்கு என்ன காரணம்?''

''கேட்டால் சிரிப்பு வரும் — போன மாசம் ஆஷா காலில் ஏதோ கட்டி என்று ஸ்கின் ஸ்பெஷலிஸ்டிடம் போயிருக்கிருள். மீர்சந்தானியும் கூடப் போயிருக்கிருன் — தொடையில் இருக்கிற கட்டியைப் பார்ப்பதற்காக டாக்டர் 'ப்ளீஸ் ஆஸ்க் யுவர் யங்கர் பிரதர் டு கோ அவுட்' என்ருராம் — 'என் தம்பியா? இவரா? — என் ஹஸ்பெண்ட், டாக்டர்!' என்று ஆஷா டாக்டரைத் திருத்தி இருக்கிருள். அந்த டாக்டர் சும்மா இருக்கக் கூடாதோ?

'அடேடே — அப்படியா? பார்த்தால் ஒல்லியாக உங்கள் தம்பி மாதிரி இருந்தார். அதுதான் கேட்டேன் — ஸாரி....' என்று விளக்கம் வேறு கொடுத்திருக்கிருர். வீட்டுக்கு வரும்போதே ஆஷா சண்டை போடத் தொடங்கி விட்டாளாம் — 'அது எப்படி அந்த டாக்டர் அப்படி 'இன்ஸல்ட்' பண்ணலாம்?' என்று. மீர்சாந்தானி—என்ன பண்ணுவான்?' நீ குண்டு, நான் ஒல்லி. அதனுல் சும்மா விளையாட்டுக்குக் கேட்டிருப்பார் — டேக் இட் ஆஸ் எ ஜோக்' என்று சமாதானம் செய்திருக்கிருன்.

ஆனுல் ஆஷா விடவில்லை — மறுநாள் காலையிலிருந்து டிபன், சாப்பாடு எல்லாம் இரண்டு மடங்காகச் சாப்பிட வேண்டும் என்று மீர்சந்தானியை வற்புறுத்தத் தொடங்கினளாம். ஏதோ தமாஷ் என்று இரண்டு நாட்களை பொறுத்தவனுக்கு மூன்றும் நாள் கோபம் வந்து விட்டதாம். 'எனக்கு அதிகமாகச் சாப்பிட்டால் வயிறு கெட்டுப் போகும். என்னுல் பருக்க முடியாது. நீ வேண்டுமானுல் இளைக்கப் பார்' என்று சொல்லியிருக்கிருன்.

அதிலிருந்து சண்டை பெரிதாகி விட்டதாம். 'யூ டோண்ட் கேர் அபௌட் மீ' என்று ஆஷா கத்த, இவன் கத்த, விரிசல் பிளவாகி விட்டது. அதன் பிறகு தொட்டால் குத்தம், நின்ருல் குத்தம். பதினைந்து இருபது நாட்கள் அப்படியே இருந்த பிறகு பிரிவதுதான் நல்லது என்று அவர்கள் முடிவு எடுத்து விட்டார்களாம்.

'என்னடா பாவி. இந்தச் சின்ன விஷயத்துக்கா சண்டை?' என்று அவனைக் கேட்டேன். 'சின்னதில் ஆரம்பித்தது எது வரைக்கும் போனது என்று உனக்குத் தெரியாது. எங்கள் குடும்பத்தைச் சண்டையில் இழுத்தாள். நான் வேறு பெண்ணை மனசில் நினைத்துக்கொண்டு இருப்பதாகக் கூத்தடித்தாள். ஓ! யூ டோண்ட் நோ. ஆஷா ஈஸ் எ டெர்ரர்' என்று சொல்லி அழுகிருன். ஒருநாள் குடித்துவிட்டு அவளைத் தொடப் போனுனும். ஆஷா அசிங்கமாக இவனைத் திட்டவே, கோபம் வந்து அவளை அடித்து விட்டானும். அவள் அப்பா வீட்டுக்கு உடனே கிளம்பிப் போய் விட்டாள். மறுநாளே வக்கீல் நோட்டீசும் வந்துவிட்டது. எதற்காக ஆஷா இப்படி ஒன்றுமில்லாததைப் பெரிது செய்தாளோ! நல்ல பெண் மாதிரி இருந்தாள் — உள்ளே எத்தனை விஷம்?''

அவன் பேசி முடித்து விட்டான். அவனுக்கு அவன், ஆஷாவைத் தாக்கிப் பேசியது கோபத்தை மூட்டியது.

''உங்களுக்கு மீர்சந்தானி பக்கம் தானே தெரியும்? ஆஷாவை விசாரிக்காமல் அவளைப் பத்தி மட்டமாகப் பேசுவது தவறு. ஷி ஈஸ் எ நைஸ் கேர்ள். இவன் குடித்துவிட்டு அவளை என்னவெல்லாம் பேசினுனே! கையை நீட்டி அடிக்கிறவன் ஓர் ஆண் பிள்ளையா?....சேடிஸ்கஸ்டிங்''.

''அடித்தால் என்ன தவறு? அவள் கண்டபடி பேசலாம் என்ருல் இவன் ஒரு தட்டு தட்டினுல் என்ன?'' அவன் மீர்சந்தானிக்கே பரிந்து கொண்டு வந்தான்.

''வாட்! ஒரு தட்டு தட்டினுல் என்னவா? 'மேல் சாவனிஸம்' பேசுகிறதா? ஆண் பிள்ளை என்ருல் என்ன வேண்டுமானுலும் செய்யலாமா? அதற்கு அதிகாரம் உண்டா? தவற்றைப் பண்ணுவதே 'மென்'தான். இதில் வாய் வேறு!'' அவள் எதிர்த்து வாயாடினுள்.

இப்போது அவனுக்குச் சீற்றம் எழுந்தது.

''ரொம்ப உனக்குத்தான் தெரியும் என்று பேசாதே. தப்பு ஆண்களை விடப் பெண்கள் தான் அதிகம் செய்கிருர்கள். ஆண்களைப்பற்றி உனக்கு என்ன தெரியும்? டோண்ட் ஜெனரலைஸ் ஐ ஸே'' — அவன் கத்தினுன்.

''கத்தி விட்டால் சரியாகி விடுமா? இன்றைக்குக் கூட நீங்கள் தவறு செய்திருக்கிறீர்கள். ஐந்துமணிக்கு வருவதாகச் சொல்லி என்னைக் காக்க வைத்ததுமில்லாமல் எட்டு மணிக்கு வந்து விட்டு, மரியாதைக்கு ஒரு ஸாரி கிடையாது. என்ன பெரிய பேச்சு வேண்டியிருக்கிறது?''



யுரானியம் கார்ப்பரேஷன், டெபுடி பர்ச்சேஸ் கண்ட்ரோலர் ஸ்ரீ M. P. K. மூர்த்தி அவர்கள் குமாரத்தி சௌ. சியாமளா B. A.க்கும், டாடா ஸ்ரீ L. R. விசுவநாதன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி V. B. ராஜன் B. Sc., B. E.க்கும் 7-2-77 அன்று ஜாதுகுடாவில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்





'சதய கங்கை' ஆசிரியரும் இராமலிங்கர் பணிமன்றச் செயலாளருமான திரு பகீரதன் அவர்களின் முதல் மகள் செல்வி பிரேம குமாரிக்கும், தஞ்சை திரு எஸ். முருகேசன் அவர்கள் மகன் செல்வன் சுதர்சனன் (Flight Lieutenant, I. A. F.) அவர்களுக்கும் திருமணம் சமீபத்தில் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அன்று மாலை நடைபெற்ற வரவேற்புக்கும், உறவினர்களும், நண்பர்களும், நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள்

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் I

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| தாராபுரம் | 2 | காலை 9-00 -- 10-00 | புவனா க்ளினிக், பஜார் தெரு |
| பழனி | 2 | காலை 11-00 -- 12-00 | ஜெயா மெடிகல் மார்ட் |
| உடுமலைப்பேட்டை | 2 | மாலை 3-00 -- 4-00 | ராஜேந்திரா அண்டு கோ., கடை வீதி |
| பொள்ளாச்சி | 2 | மாலை 5-00 -- 6-00 | தி எம்பயர் பார்மஸி. |
| கோயமுத்தூர் | 3 | காலை 9-11 | சீதாராம் லாட்ஜ், ஸ்டேட் பாங்க் ரோடு, |
| " | 3 | மாலை 3 - 7 | ரெயில்வே ஸ்டேஷன் எதிர்புறம் |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8-00 -- 9-00 | C. R. K. மெடிகல்ஸ், கடை வீதி. |
| கோபி | 4 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீனிவாஸா டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட், 56, |
| பவானி | 4 | மாலை 2-00 -- 3-00 | M. L. செட்டியார் அண்டு சன்ஸ், கடை வீதி. |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 -- 5-30 | ஸ்ரீ ராமன் லாட்ஜ். |
| ஈரோடு | 5 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸ். |
| திருப்பூர் | 5 | மாலை 4-00 -- 5-30 | P. R. மணியம் ஸ்டோர்ஸ், பல்லடம் ரோடு. |
| திருச்சி | 6 | காலை 11-00 to மாலை 6-00 | திருச்சி ஆயுர்வேதிக் யூனியன், சின்னக் கடைத் தெரு. |
| தஞ்சாவூர் | 7 | காலை 7-00 -- 9-00 | Dr. S. வெங்கடராஜன் வைத்தியசாலை, சகாநாயக்கன் தெரு. |
| கும்பகோணம் | 7, 17,27 | காலை 10-00 to மாலை 5-00 | ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை பிராஞ்ச், 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு. |
| சீர்காழி | 8 | காலை 7-00 -- 8-00 | பிரம்ம வித்யா ஆயுர்வேத வைத்தியசாலை, தாளாடன் சன்னதி |
| மாயூரம் | 8 | காலை 9-30 -- 12-00 | ஸ்ரீ வெங்கடேசா மெடிகல் ஹால், பட்டமங்கலம் தெரு |
| நாகப்பட்டினம் | 8 | மாலை 5-00 -- 6-00 | நாகை மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திருவாரூர் | 9 | காலை 7-30 -- 9-00 | தன்வந்தரி மெடிகல் ஹால், 21, மடப்புரம் பாட்டை. |
| விஜயபுரம் | 9 | காலை 10-00 -- 11-00 | சகுந்தலா பார்மஸி, நாகை ரோடு. |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2-00 -- 3-30 | ஸ்ரீ T. V. சந்திரசேகரம் பிள்ளை, கடை வீதி. |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 -- 6-30 | கோபால் விலாஸ், பெரிய தெரு. |
| புதுக்கோட்டை | 10 | காலை 8-00 -- 10-00 | நியூ லக்ஷ்மி டிஸ்பென்ஸரி, கீழ ராஜவீதி. |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 -- 3-30 | ஸ்ரீ சோமசுந்தரம் மெடிகல் ஸ்டோர்ஸ், ஆர்ச் ரோடு. |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 -- 6-00 | நியூ கௌரி லாட்ஜ், மகர் நோம்பு அக்ரஹாரம். |
| சிவகெங்கை | 11 | காலை 8-30 -- 10-00 | கௌரி அண்டு கோ., கடை வீதி. |
| மதுரை | 11 | காலை 11-00-12-30 | T. N. சொக்கலிங்கம் பிள்ளை சன்ஸ், |
| " | 11 | மாலை 3-00- 6-00 | வடக்கு சித்திரை வீதி. |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10ந் தேதி மாலை 4 முதல் 6 மணி வரையிலும், 24ந் தேதி மாலை 5-30 முதல் 7 மணி வரையிலும் எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன்: 87) திருச்சி ஜில்லா

''இங்கே என்ன நலே போகிற காரியம்? சொன்னால் சொன்னபடி வந்து சேருவதற்கு? ம்...மீர்சந்தானி மனசு உடைந்து வந்திருந் தான். நண்பன் என்று பேர் எதற்கு? ஒரு மெண்டல் கம்ஃபர்ட் கொடுக்க வேண்டாம்? உனக்கு எங்கே அதெல்லாம் புரியப் போகி றது?''

''ஆல் ரைட். உங்களுக்கு என்னைவிட உங்கள் நண்பர் முக்கியம். ஓ. கே.. ஆனால் 'காத்துக் கொண்டு இருக்காதே — நான் வர லேட்டாகும்' என்று ஒரு போன் பண்ணத் தெரியாது? அந்த அளவுக்குக் கூட மரியாதை இடையாதா?''

கோபத்தில் அவன் கண்கள் சிவந்து போயின. ''ஷட் அப். எனக்கு மரியாதையை நீ கற்றுக் கொடுக்க வேண்டாம். குட்னஸ்! மனிதனின் கஷ்டத்தைப் புரிந்து கொள்ளத் தெரியாத உன் மாதிரி பெண்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேனே — என்னைப் போல் மடையன் உண்டா?''

''யா. ஐ அக்ரி. மனைவிக்கு மரியாதை கொடுக்காத உங்கள் சிநேகிதன் மாதிரி தானே நீங்களும் இருக்க முடியும்?''

''ஷட் அப். அவனை எதற்காக நம் ஆர்க்யூ மெண்டில் இழுக்கிறாய்? உனக்கு நான் ரொம்ப இடம் கொடுத்தது தவறு. அதுதான் துள்ளு கிறாய்.''

''நீங்கள் ஒரு ஷட் அப் சொன்னால் எனக் குப் பதிலுக்கு நூறு தடவை ஷட் அப் சொல லத் தெரியும். சொல்லட்டுமா?'' ஆத்திரத் தில் அவள் முகம் விகாரமாய் இருந்தது.

அவன் 'பட்'டென்று நெற்றியில் அடித்துக் கொண்டான்.

''நோ வொண்டர். மீர்சந்தானி இப்படிப் பைத்தியம் போல் ஆகி விட்டான். உன் மாதிரியும், ஆஷா மாதிரியும் மனைவி ரூபத் தில் பிசாசுகள் இருந்தால் மனிதன் நிம்மதி யாகவா இருக்கமுடியும்? நௌ வில் யூ ப்ளீஸ் கெட் அவுட் ஆப் திஸ் ரூம் அண்ட் லீவ் மீ அலோன் ?''

அவளைப் பிசாசு என்று அழைத்து, 'கெட் அவுட்' என்றும் சொன்ன மாத்திரத்தில் அவள் கோபம் அதிகமாகிக் கண்கள் பள பளத்து, நாசி துடிக்கத் தொடங்கியது. அவள் ஆங்காரமாய்க் கத்தினாள்.

''நானா பிசாசு? மீ? கல்யாணம் ஆகி மூன்று மாசம் ஆவதற்குள் நான் பிசாசா? என்ன சொன்னீர்கள்?' 'கெட் அவுட்' என்று தானே? ஓ.கே. ஐ வில் கோ. உங்களை ஜெண்டில் மேன் என்று நம்பினேன். பட் யூ ஆர் எ ப்ரூட்.''

அவள் அழுது கொண்டே எழுந்து அறைக்கு வெளியே ஓடினாள். அவன், டீப்பாயைக் காலால் உதைத்து விட்டு, அறைக் கதவைப் படீரென்று அறைந்து மூடினான்.

பெரிதாக வளர்ந்து விடப் போகும் ஒரு சண்டை அன்று அந்த வீட்டில் சின்னக் குழந்தையாய்ப் பிறந்தது!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

புதிதாகப் பதவி ஏற்ற ஒருவர் முதல் நாள் தம்முடைய ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட பெரிய அலுவலக அறையில் புத்தம் புதிய மேஜையின் முன் அமர்ந்தார். அவருக்குப் பெருமை பிடிபட வில்லை. அப்போது யாரோ அவரைப் பார்க்க வந்திருப்பதாகச் சொல்லவே அந்த ஆளை உள்ளே அனுப்பச் சொன்னார். அந்த ஆள் உள்ளே நுழையும்போது தம்முடைய செல்வாக்கை அவ னிடம் காட்ட வேண்டும் என்று எண்ணி, டெலி போன் ரிஸீவரை எடுத்து, ''சரி, அப்படியே செய் கிறேன். இன்று கவர்னரைப் பார்க்கச் செல்லும் போது அவரிடம் சொல்லி விடுகிறேன்'' என்றார். பிறகு தன்னைப் பார்க்க வந்திருப்பவன் பக்கம் திரும்பி, ''உனக்கு என்னப்பா வேண்டும்?'' என்றார். அவன் ''ஒன்றுமில்லே சார். டெலி போன் ரிப்பேர் செய்ய வந்திருக்கிறேன்'' என்றான்.

-சாவித்திரி



''சிறிது தாற்காலிகமான பாதுகாப்பை விலைக்கு வாங்கும் பொருட்டு அத்தி யாவசியமான சுதந்தி ரத்தை விட்டுக் கொடுப்ப வர்கள் சுதந்திரத்துக்கும் அருகதையற்றவர்கள்; பாதுகாப்புக்கும் அருகதை யற்றவர்கள்.''

பெஞ்சமின் ஃபிராங்க்ளின்-பாணன்



புகழ் பெற்ற பிரெஞ்சு நாவலாசிரியர் அலெக் சாண்டர் டூமாஸ் தம் நண்பர்களுடன் நாடகம் பற்றிப் பரிசீலிப்பது வழக்கம். ஒரு நாள் நண்பரின் நாடகம் ஒன்று நடந்தபோது சபையில் தூங்கும் ஒருவரைக் காண்பித்து, ''பார்த்தீர்களா? உங்கள் நாடகம் செய்யும் வேலையை!'' என்றார். அப்போது சும்மா இருந்த நண்பர் மறுநாளே டூமாஸின் நாடகம் நடக்கும்போது சபையில் ஒரு வரைக் காண்பிக்க அங்கு ஒருவர் தூங்கிக் கொண் டிருப்பதைக் கண்டார் டூமாஸ். ''ஓ! அதுவா... நேற்று உங்கள் நாடகத்தில் தூங்கினவர்தான் அவர். இன்னும் எழுந்திருக்க வில்லை!'' அதைக்கேட்டு நண்பர் அசந்துபோனார்.

-கோ. தீபா

# கிளர்ச்சியூட்டும் காட்டன்ஸ் அளிப்பதோ சென்ச்சுரி

**ஸூட்டிங்குகள்**—கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் சென்ச்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள், எண்ணற்ற திருசுகள்-இவை எல்லாமே சேர்ந்து, சென்ச்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு சென்ச்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். சென்ச்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக் புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள். களிநடம் புரியும் வண்ணங்கள். சென்ச்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
**பம்பாய் 400 025**





சென்ச்சுரி
நூற்றுக்குநூறு
பருத்தித்
துணிமணிகள்.

national-913-Tamil

# சேரமான் காதலி

அத்தியாயம் 19

## குருவை வென்ற சீடன்

மடமை, பாசம், உறவுகள் அனைத்தையும் மறக்கடிப்பது காமம்.

அது, கால நேரத்தை அறியாத உணர்ச்சி.

மானம், வெட்கம், கூச்சத்தை மறக்கடிக்கும் ஒன்று.

ஞானமும், கல்வியும் பயன்படாமல் செய்துவிடும் வித்தை அதற்கு மட்டுமே தெரியும்.

இளம் பருவத்தில் ஒருவனை மூடனாக்குவதற்குக் காதல், அல்லது காம உணர்ச்சி ஒன்றே போதும்.

ஆனால் சேரமான் இளைஞரல்ல; மூழுப் பருவத்தையும் அடைந்து முதுமை அடைந்து விட்டவரும் அல்ல! நடுப் பருவம்.

உடலுக்கும் உள்ளத்துக்கும் மிக மிகப் பொருத்தமான ஒரு துணை வாய்த்து விட்டால், பருவம் என்ன பருவம்?

திருவஞ்சைக் களத்து அரண்மனை சப்ர மஞ்சம் சேரமானோடு முதலில் பூஜியானுவைச் சுமந்தது. இப்போது சலீமாவைச் சுமந்தது. பட்டத்து ராணி தான் இதில் பாவம் செய்தவள் ஆனாள்.

அரசு என்றொரு அங்கம் இருப்பதையே முற்றிலும் மறந்து விட்ட சேரமான், சலீமாவோடு தனது இரண்டாவது இரவை அந்த மஞ்சத்தில் கழித்தார்.

பால் நிலாவில் பளபளக்கும் அந்த வடிவம், அவரது இனிய கனவுகளுக்கெல்லாம் இடம் கொடுத்தது.

தன்னை மறந்த லயத்தில் அவர்கள் மயங்கிக் கிடந்தார்கள்.

அந்த இரவில் உறங்காமல் இருந்தவர்கள் நால்வர்.

பத்மாவதி — பூஜியானு — நாராயண நம்பூதிரியின் மூளை — வானத்து நிலவு.

பொழுது விடிந்து சலீமா புத்தாடை அணிந்தபோது, சேர நாட்டுப் பாணியிலே அவளுக்கும் முண்டுடுத்தி விட்டார் சேரமான்.

காம மயக்கம் தீர்ந்த நிலையில் குளித்துவிட்டு வெளியே வந்தபோது தான், ராஜாங்கத்து நினைவே அவருக்கு வந்தது.

'நம்பிரான் சுவாமிகள் வந்தால் நிலைமை எப்படி இருக்கும்?' என்று அப்போதுதான் யோசித்துப் பார்த்தார்.

அரண்மனைக் காவலாளிகளில் தமது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களை மட்டுமே வைத்துக் கொண்டு, மற்றவர்களுக்கு ஒய்வு கொடுத்து அனுப்பினார் சேரமான்.

'நம்பிரான் சுவாமிகள் வந்தால் முன்கூட்டியே தமக்குத் தெரிவிக்கும்படி வெளியில் நின்ற புரவி வீரனுக்குக் கட்டளை இட்டார். அவனே நம்பூதிரியின் ஆள்!

இப்போது அவர் பூஜை அறையை நாடவில்லை.

ஏனோ அவருக்கு இப்போது தமது சமயத் தெய்வங்களின் மீது நம்பிக்கை இல்லை.

சில நாட்கள் பாராதிருந்த ஏடுகளைப் புரட்ட ஆரம்பித்தார்.

அப்போது வெளியே நின்ற காவலாளிகளுக்கு ஒரு சிக்கல் முளைத்தது. அதில் திகைப்பும் இருந்தது.

கைக்குழந்தையோடு உள்ளே நுழைய முயன்ற பூஜியானுவை, அனுமதிப்பதா இல்லையா என்பதே அது.

''அரசரின் தேவியரில் ஒருத்தி, அனுமதித்துவிடு'' என்று முணு முணுத்தான் ஒரு காவலாளி.

குறுக்கிட்டு நின்ற ஈட்டிகள் விலகின.

உள்ளே நுழைந்த பூஜியானு, தான் சாந்தியடைந்த பள்ளியறையை நோக்கியே சென்றாள்.

அந்தப் பக்கமே எட்டிப் பாராமல் பத்மாவதியும், தாவளி சகோதரிகளும் தனி மண்டபத்தில் இருந்ததால் குறுக்கீடுகள் ஏதுமில்லை.

பள்ளி அறைக்குள் அவள் நுழைந்த போது கண்ணாடியின் முன்னால் அமர்ந்து வைர நகைகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள் சலீமா.

கண்ணதாசன்

கண்ணாடியில் யூஜியாளுவின் உருவம் தெரிந்தது. அன்று பகவதி கோவில் அருகே பார்த்த அதே பெண்; சேரமா னின் அன்புக்குரிய இஸ்ரவேல் நாயகி!

'இஸ்ரவேலுக்குச் சென்று விட்ட இவள் எப்போது திரும்பினாள்?'

திகைத்துப் போய்ச் சலீமா கேட்டாள். ''யார்?''

''இந்தக் குழந்தையின் தாய்!''

''யாரைப் பார்க்க வேண்டும்?''

''இதன் தந்தையை.''

''அவர் எங்கிருக்கிறார்?''

''இந்த அரண்மனையில்!''

''நீங்கள் சொல்வது...?''

''உங்களுக்குத் தெரியாத ஒரு ரகசியம்!''

''ஓரளவு எனக்கும் தெரியும்.''

''இஸ்ரவேலின் மணியோசை உங்கள் காதுகளுக்கும் கேட்டதா?''

''அந்த மணி ஒலித்துக் கொண்டிருக்கும்போதே இந்தத் திருமுகத்தை நான் பார்த்திருக்கிறேன்!''

''அந்த மணியோசை நின்று போய் விட்டதாக நினைத்தீர்களா?''

''இல்லை; நான் கேட்கக் கூடிய தூரத்தில் அது இல்லை என்று நினைத்தேன்!''

''ஒலியைக் கொண்டு செல்லும் சக்தி அராபிக் கடலுக்கு இருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''அராபிக் கடலுக்கென்ன? எந்தத் தண்ணீருக்குமே அந்தச் சக்தி உண்டு என்பதை நான் அறிவேன்!''

''மணியினால் கைவிடப்பட்ட ஒலி, கொம்பினால் கைவிடப்பட்ட கொடி, பூமியால் கைவிடப்பட்ட தண்ணீர், வானத்தால் கைவிடப்பட்ட நிலவு—நான்!''

''மணியினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒலி, கொம்பினால் தழுவப்பட்ட கொடி, பூமியில் ஊற்றெடுத்த தண்ணீர், வானத்தில் அமர்ந்து கொண்ட நிலவு...''

''....நீங்கள்தான் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். சகோதரி, நாம் இருவருமே கடல் கடந்து வந்தவர்கள்தான்; இந்த மண்ணுக்கு அந்நியர்கள்தான்; அந்நிய மண்ணிலே சந்திக்கும்போது ஒருவருக்கொருவர் சகோதரிகளாகிறார்கள் என்ற உண்மையை நீங்கள் நிலைநாட்டி விட்டீர்கள். ஏனென்றால், சகோதரிகள் இருவரும் ஒருவரையே நேசிக்கிறோம் அல்லவா!''

''யூஜியானா! என்னை நன்றாகப் பார்; உன்னை இந்தக் கண்ணாடியில் பார். உன்னைவிட நான் அழகியல்ல. ஏதோ விட்ட குறை தொட்ட குறை. நீ இல்லையென்றுதான் நான் எல்லையானேன். நீ திரும்பி வந்து...''

''....தொல்லையானேன் என்கிறீர்களா?''

''இல்லை. விலக்க முடியாத பந்தத்தில் நான் விழுந்த பிற்பாடு, விளக்க முடியாத ஒரு கேள்விக் குறியோடு நீ வந்து நிற்பதில் அர்த்தமென்ன?''

''எனது பந்தத்தை அவரால் விலக்க முடிந்ததே...''

''...என்னை விலக்க முடியாதே!''

''ஏன்?''

'எங்கள் ரத்தம் மகமதிய ரத்தம்! கை தொட்ட ஒருவர் கை விடுவாரானால் எங்களை விலக்கி வைக்கும் இடம் மரணம் ஒன்றே!''

''என் ரத்தம், யூத ரத்தம். அது வாணிப ரத்தம். அதுவே பேரம் பேசுவதை மறந்து விட்டு இஸ்ரவேலுக்குக் கப்பல் ஏறியதே!''

''சகோதரி! நமது ரத்தத்துக்கு மூலம் ஒன்றுதான். அது காலத்தாலே மாறுபட்டது. நமது சித்தத்திற்கு நாட்டம் ஒன்றுதான். அது காலத்தாலே வேறுபட்டது. நீ விட்டுச் சென்ற இடத்தை நான் நிரப்பி யிருக்கிறேன். அதை நீ மறுபடியும் நினைப்பது, என்னைச் சித்திரவதை செய்வதாகாதா?''

''இருவரில் யாராவது ஒருவர் சித்திரவதைப்பட்டுத்தான் தீர வேண்டும் என்று இறைவன் விதித்திருக்கிறான். ஆனால் நான் ஒரு வழித் தோன்றலோடு வந்து நிற்கிறேன்; நீ அப்படி இல்லையே!''

''நானும் அப்படி ஆகக் கூடிய நிலைக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறேன். இந்தச் சிக்கலை யார் தீர்ப்பது?''

—என்று சலீமா சொல்லிக் கொண்டிருக்கும்போதே ''நான்தான் தீர்க்க வேண்டும்'' என்று உள்ளே நுழைந்தார் சேரமான். என்று மில்லாதவாறு ''அரசே!'' என்றாள் யூஜியானா.

''யூஜியானா!'' என்ற சேரமான் அவளையே கொஞ்ச நேரம் பார்த்தார்.

அவள் கண்களிலிருந்து வெள்ளம் போல் கண்ணீர் வழிந்தது.

அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்த தன் பெண் குழந்தையை அவர் முன்னால் நீட்டினாள், யூஜியானா.

அதை அப்படியே வாங்கி மாறி மாறி முத்தமிட்டார் சேரமான்.

பிள்ளைப் பேறில்லாத அவருக்கு, அந்தப் பெண் மகவு ஏற்படுத்திய பாசம் காட்டாற்று வெள்ளம் போல் பெருக்கெடுத்தது. யூஜியானா அவர் கால்களில் விழுந்தாள். அவளை எழுப்பி ''உடல் நலம் நன்றாக இருக்கிறதல்லவா?'' என்றார் சேரமான்.

''உள்ளத்தைத் தவிர அனைத்தும் நலமே சுவாமி!'' என்றாள் அவள்.

''யோகோவா...?'' என்று கேட்டார் சேரமான்.

''வந்திருக்கிறார். உங்களைப் பார்க்க அவருக்குக் கூச்சம்!'' என்றாள் பூஜியானு.

அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்ட பாவத்தைப் பைத்தியக்காரி போல் நின்று பார்த்துக்கொண்டிருந்தாள் சலீமா.

சேரமான் பூஜியானுவின் கண்ணீரைத் துடைத்து விட்டார்.

அப்போது நம்பூதிரிகள் சபையிலிருந்தவாறே நாராயண நம்பூதிரி ருத்திராட்சத்தைத் தட்டிக் கொண்டிருந்தார். இனிமேல் சேரமான் ஏமாறுவாரா? அவரது 'ஞானதிருஷ்டி'யில் அதுவும் தெரிந்து கொண்டுதானிருந்தது.

சேரமான் கைக்குழந்தையோடு மஞ்சத்தில் அமர்ந்தார். சலீமாவின் கையைப் பிடித்து இடதுபுறம் உட்கார வைத்துக் கொண்டார். பூஜியானுவின் கையைப் பிடித்து வலதுபுறம் உட்கார வைத்துக் கொண்டார்.

பூஜியானுவின் குழந்தையைச் சலீமாவின் கைகளிலேயே கொடுத்தார். பிறகு இருவரையும் பார்த்து, ''நீங்கள் இருவரும் என்னைக் காப்பாற்றுவீர்களா?'' என்று கேட்டார்.

இருவரும் பதறிப்போய், ''என்ன? என்ன?'' என்றார்கள்.

''வஞ்சகர்கள் என் சொந்த வாழ்க்கையோடு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். அத்தனை சிக்கல்களும் அவர்களால் விளைந்தவையே. இப்போதும் உங்களுக்குள் ஒரு மோதல் ஏற்படும் என்றுதான் பூஜியானுவை வரவழைத்திருக்கிறார்கள். தொட்டவர்களைக் காப்பாற்றும் ராஜ நீதியை விட்டு நான் விலக மாட்டேன். நீங்கள் இருவரும் சகோதரிகளாக என் அருகிலேயே இருக்க முடியாதா?'' என்று பரிதாபமாகக் கேட்டார் சேரமான்.

இருவருமே ஒருவரையொருவர் பார்த்தவாறு கட்டித் தழுவி, சேரமானின் கால்களிலே விழுந்தார்கள்.

அப்போது நம்பூதிரிகள் சபையிலே இதுவரை நாராயண நம்பூதிரி தட்டிக் கொண்டிருந்த ருத்திராட்சம் அறுந்து கீழே விழுந்தது.

அரண்மனையில் அவர் நியமித்திருந்த காவலன் மாலையிலேயே இரண்டு கிளிகளும் ஒன்றுபட்டு விட்ட செய்தியை அவருக்குத் தெரிவித்தான்.

ஆத்திரத்தால் முகம் சிவந்த நம்பூதிரி ஏட்டையும், எழுத்தாணியையும் எடுத்தார். (தொடரும்)

---

# ஸிண்ட்ரல்லா கேக்!

''கேக்கைப் புசிக்கவும் வேணும்; அது கையில் இருக்கவும் வேணும்'' என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். சுவையான 'கேக்' என்றால் உடனே புசித்து ருசிக்க விரும்புவோம். அதே 'கேக்' கலையழகு மிளிரும் உருவமாகப் படைக்கப் பெற்றால், கண்ணெதிரில் வைத்து அழகு பார்த்துக் கொண்டே இருக்கத் தோன்றும். சாந்தோம் 'கல்கரல் அகாதமி' மாணவிகள் 'ஸின்ட்ரல்லா' கதைக் காட்சியின் மணம் கமழும் 'கேக்'குகளாக உருவாக்கி இருந்த நேர்த்தியைப் பார்த்தவர்கள் அந்த அறையை விட்டு வெளியே வர மனமில்லாமல் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள்! அவற்றை விலை கொடுத்து வாங்கினாலும் கலையழகைக் குலைத்து வெட்டித் துண்டாடிப் புசிக்க மனம் வருமா என்பது ஐயமே!



கல்கரல் அகாதமியில் இளம் பெண்களுக்குத் தன்னம்பிக்கையை வளர்க்கும் பல்வேறு துறைகளில் பயிற்சி அளிப்பது ஒருபுறமிருக்க, மாணவிகள் அருகில் உள்ள குடிசைப் பகுதிகளில் வாழும் ஏழைப் பெண்மணிகளுக்கு அளிக்கும் பயிற்சி கவனத்தைக் கவர்வது. வாழை, பனை, கத்தாழை நார்களைக் கொண்டு குடிசை வாழ் பெண்கள் கண்கவர் வனப்புடன் உருவாக்கியுள்ள அழகுப்பைகள், ஜிப் வைத்துத் தைத்த உருளை வடிவிலான பென்சில் கூடுகள், கால் மிதியடிகள் முதலிய பொருள்கள் கல்கரல் அகாதமியின் கண்காட்சியில் இடம் பெற்றன. எண்பத்தைந்து குடிசை வாழ் பெண்மணிகளுக்குக் கலைப் படைப்புகளின் மூலம் ஊதியம் தேடும் வாய்ப்பினை நல்கி வருகிறது இந்த நிறுவனம்.

-ருக்மிணி பாலகிருஷ்ணன்

"கெல்வினேட்டர், நம் நாட்டில் கிடைக்கும் ரெப்ரிஜிரேட்டர்களில் மிக அருமையானது. அதனுலேயே, அந்த சிறப்புமிக்க கெல்வினேட்டரை நான் வாங்கினேன். என் அனுபவமும் அதுதான். கெல்வினேட்டர் மிக உன்னதமானது என்பது மறுக்க முடியாத உண்மை. இயங்குவதில் ஒரு மென்மை, பார்ப்பதற்கு ஒரு அழகு. இயங்கும் சப்தமே கேட்பதில்லை. மின்செலவும் மிகக் குறைவு. இப்படி ஆயிரங்காரணங்கள் கூறலாம். உண்மையில் நான் கெல்வினேட்டரைத் தேர்ந்தெடுத்து வாங்கியதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன்."

என்று கூறுகிருர் திருமதி அனிதா ராம், கெல்வினேட்டர் வாங்கியதில் மகிழ்ச்சியடைந்த அனேக ஆயிரம்பேர்களில் இவரும் ஒருவர்.



# கெல்வினேட்டர்

கிடைக்குமிடம்:

## ஸ்பென்ஸர்ஸ்

1865-ல் தோன்றியதிலிருந்து
சேவையே எங்கள் குறிக்கோள்




ஸ்பென்ஸர் & கோ. லிட்.,
153, மவுண்ட் ரோடு, சென்னை-600002
19A அலிப்பூர் ரோடு, டில்லி-110054
ஸ்பென்ஸர் பில்டிங்,
போர்ஜெட் தெரு, பம்பாய்-400036
70, டயமண்ட் ஹார்பர் ரோடு, இதார்பூர்,
கல்கத்தா-700 023

புதிய 286 லிட்டர் மாடல் தானே இயங்கும் டிஃப்ரோஸ்டிங் மற்றும் ட்ரெய்னிங் அமைப்புடன் கூடக் கிடைக்கிறது

கெல்வினேடர் ரிஃப்ரிஜிரேடர்கள். 286 & 165 லிட்டர் மாடல்கள் இப்பொழுது ISI அங்கீகாரம் பெற்றுள்ளன.

SC.662Tam.(7)

''இந்த அப்பாவுக்கு இப்ப என்ன அவசரம்? ரிடையர் ஆனப்புறம் கூடக் காலம்பற சீக்கிரம் குளிக்கணுமா? விடியறதுக்கு முன்னுலே 'பாத் ரூமை'ப் பிடிச்சுண்டுட்டா ஆபீசுக்குப் போறவா என்ன செய்யறது? அப்பா, அப்பா....!''

ராஜசேகரின் பெரிய பிள்ளை — பாங்கில் வேலை பார்ப்பவன் அலறினுன். அவர் குளியலறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். அவர் இன்னும் குளிக்கவில்லை.

''அப்பவே பிடிச்சு ஒரு நாழியா அவன் அவசரப்பட்டுண்டிருக்கான். நானும்தான் கேட்கறேன். உங்களுக்கென்ன இப்ப அவசரம்? ஆபீஸுக்கா போகப் போறேள்? அப்புறமா ஆற அமரக் குளிச்சுக்கப்படாதா?'' —இது அவரது சகதர்மிணி காமாட்சி.

''அப்பா, அண்ணுவுக்கு அடுத்தபடியா நான் குளிக்கப் போறேன். இன்னிக்கு ஸ்பெஷல் கிளாஸ்' இருக்கு. ஒன்பது மணிக்கெல்லாம் காலேஜிலே இருந்தாகணும்.... லோ பாத் ரூம் அட்வான்ஸ் புக்கிங்!'' இது அவரது இரண்டாவது பெண் கமலா. கல்லூரியில் படிக்கிறள்.

''போ, அக்கா! நான்தான் அண்ணுவுக்கு அடுத்தபடி குளிக்கப் போறேன். பாட்டுக் கிளாஸுக்கு வேறே போகணும்...'' இது இரண்டாவது பெண் கனகா.

ராஜசேகரன் பிரமை பிடித்தவர் போல் கூடத்தில் போய் நின்று விட்டார். 'ரிடையர் ஆனவனுக்கு இவ்வளவு அவமரியாதையா?'

''அப்பா, நீங்கதான் இப்ப குளிக்கப் போறதில்லையே, உங்க பேத்தியைக் கொஞ்சம் வைச்சுக்குங்களேன்!'' என்று கூறிக் கொண்டே அப்பாவின் மறுமொழியை எதிர்பாராமலேயே இரண்டு வயசுக் குழந்தையை அவரிடம் கொடுத்தாள், மூத்த மகள் பானு. —புக்ககத்திலிருந்து பிறந்தகத்துக்குச் சீராட வந்திருக்கிறள்.

ராஜசேகரன் மறுமொழி ஒன்றும் சொல்லாமல் குழந்தையை வாங்கிக் கொண்டார். மனம் முப்பத்தாறு வருஷ உத்தியோக வாழ்க்கையை அசை போட ஆரம்பித்தது.

அவர் வேலைக்குப் போய்க் கொண்டிருக்கிற வரையில் ஒரு கர்மயோகியாய் இருந்து உண்மையான போர்வீரன் மாதிரி கடமையைச் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார். ஒரு நாள் ஐந்து நிமிஷம்கூட வேலைக்குத் தாமதமாகப் போனதில்லை. அதிகாலையில் ஐந்து மணிக்கு எழுந்து, பூஜை, வழிபாடுகளை முடித்துக் கொண்டுதான் காப்பி சாப்பிடுவார். ஃப்ளாஸ்கில் காப்பி தயாராய் ஊற்றிவைக்கப்பட்டிருக்கும். ஏழு மணிக்குக் காப்பி சாப்பிட்டுவிட்டுப் பேப்பர் படிக்க ஆரம்பித்தால் ஒன்பது மணியாகும் அதைப் படித்து முடிக்க. ஒன்பதரை மணிக்குச் சாப்பிட்டுவிட்டுப் பத்து மணிக்கு டிரஸ் செய்து கொண்டு ஆபீசுக்குப் போகத் தயாராகிவிடுவார்.

''மடிப்புக் கலையாமல் நீங்கள் 'ட்ரிம்'மாக டிரஸ் பண்ணிக்கிறதே பிரமாதம். இவ்வளவு நேர்த்தியாக டிரஸ் பண்ணிக்கிறவாளை நான் பார்த்ததில்லை. டெய்லர் கடைப் பொம்மை மாதிரி இருக்கேள்...'' என்று காமாட்சி அடிக்கடி சொல்லுவாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பானு தன் குழந்தையைக் குளிப்பாட்ட எடுத்துச் சென்றுவிடவே, பேப்பரையாவது படிப்போமே என்று உட்கார்ந்தார்.

''நீங்கள் அப்புறம் பேப்பர் படிக்கக் கூடாதா, அப்பா? வீட்டில்தானே இருக்கிறீர்கள்?'' என்று அவரது மூத்த மகன் சகஜமாகக் கேட்டு அவர் கையிலிருந்த பேப்பரைப் பிடுங்காத குறையாக வாங்கிய போது சற்று அதிர்ந்து போனுர். ஆனல் பதில் ஏதும் பேசவில்லை. ஒரு குழந்தையைப் போல் பேப்பரை அவன் கையில் கொடுத்துவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டே வாசற்புறம் போய்விட்டார். நேற்று வரையில் அவருக்குக் கிடைத்த ஆசார உபசாரம் என்ன? இன்று கிடைக்கும் மரியாதை என்ன? 'ரிடையர் ஆகிவிட்டால் எல்லாருக்குமே இளக்காரம் தானு?' அவர் மனம் அழாத குறைதான்.

உள்ளே வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. பள்ளிக்கூடம் போகிற கனகா, கல்லூரிக்குப் போகிற கமலா, ஆபீஸுக்குப் போகிற மூத்த பிள்ளை மணி எல்லாரும் பலமாகக் குரல் எழுப்பிக் கொண்டிருந்தனர்.

''எம்மா, ஐயா இனிமேதானே குளிக்கப் போறாங்க! பாய்லரை அப்புறமா மூட்டலாமில்லையா? அவருக்குத்தான் இப்ப ஆபீஸ் இல்லையே!'' — இது வேலைக்காரி கண்ணம்மாவின் குரல்.

''ஆமாம்மா, அவருக்கு இப்ப அவசரம் இல்லே. நீ உன் வேலைகளை யெல்லாம் முடிச்சுண்டு அவருக்குப் பாய்லரிலே கரி போட்டால் போதும்....''

'என்ன கரிசனை!' ''வாசல் வராந்தாவில் உட்கார்ந்திருந்த ராஜசேகரனும் உள்ளுக்குள் வெண்டை நெற்றுக வெடித்தார்.

''அம்மா, வெண்டைக்காய் வேணுமா?'' வாசலில் கறிகாய் விற்பவன் குரல் கொடுத்தான்.

''எம்பா, எல்லா வீட்டிலேயும் பிஞ்சுக்காயெல்லாம் வித்துட்டு அவங்க கழிச்சுக் கட்டின முத்தலையெல்லாம் என்தலையிலே கட்ட வந்திருக்கியா?'' என்று கேட்டுக் கொண்டே காமாட்சி வாசலுக்கு வந்தாள்.



''எல்லோருமே இப்படிச் சொன்னால் எப்படிம்மா? எல்லா வீட்டிலேயும் உங்க மாதிரி கேட்டுட்டுப் பிஞ்சாகப் பார்த்துப் பொறுக்கிண்டிருங்க. நீங்களும் பார்த்துப் பொறுக்கிங்க.''

''இரு. இரு. நானே பிஞ்சாகப் பார்த்துப் பொறுக்கிக்கிறேன். இப்படிப் பேசியே முத்தலை என் தலையிலே கட்டிப்பிடிவே...!''

காய்கறிக்காரனும், காமாட்சியும் பேசினது ராஜசேகரனின் கவனத்தைக் கவர்ந்தது.

'எல்லோருமே பிஞ்சுதான் வேண்டும் என்கிறார்கள். முதுமைக்கு — காய்கறிகளிடையேயும் சரி, மனிதர்களிடையேயும் சரி, இடம் இல்லை. வீட்டில் மாத்திரம் இல்லை, ஆபிசிலேயும் இடமில்லை. என் இளம் பிராயம் முழுவதையும் ஆபீஸ் வேலையிலேயே செலவிட்டேன். முதுமை வந்துவிட்டது. வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள் — முற்றல் வெண்டைக்காய் யாருக்கு வேண்டும்?'




'ராஜசேகரனின் கண்டிப்பு, கறார் எல்லாம் ஓய்ந்து விட்டது. அவர் நடையிலும் முன்பிருந்த மிடுக்கு மறைந்து விட்டது. தட்டை எடுத்து வைத்து மனைவி சாப்பிடக் கூப்பிட்டதும் ராஜசேகரன் எழுந்து 'டைனிங் டேபிளு'க்குச் சென்றார். முன்பெல்லாம் ராஜசேகரனுக்குப் பரிமாறுவதென்றால் காமாட்சிக்குப் பயம். 'இது சொத்தை, சொள்ளை' என்று குறை சொல்லுவார். கொஞ்சம் உப்புக் குறைந்தாலும் சரி, தூக்கலாயிருந்தாலும் சரி, நரசிம்மாவதாரம் எடுத்து விடுவார்.

கணவன் வாய் பேசாமல் சாப்பிடுவதைப் பார்த்த காமாட்சிக்கு வியப்பு ஒருபுறம், வேதனை ஒருபுறம்.

''குழந்தை என்ன இன்னிக்குச் சமர்த்தாய்ச் சாப்பிடறது?''

ராஜசேகரன், துக்கம் தொண்டையை அடைக்க, ''ஆமாண்டி, காமாட்சி! எல்லாரும் என்னைக் குழந்தையாகத்தான் நினைச்சுண்டிருக்கா. ரிடையராகிப் பதினைஞ்சு நாட்களுக்குள்ளேயா இத்தனை அலட்சியம்?'' என்றார்.

தன் கணவர் கண்ணீர் விட்டுக் காமாட்சி பார்த்ததே யில்லை. ''ஏன் இப்படி மாஞ்சு போறேள்? நீங்க ரிடையரானதிலிருந்து நானும் கவனிச்சுண்டுதான் வரேன். முப்பத்தாறு வருஷங்கள் வேலை பார்த்ததற்கு அப்புறம் கம்பெனியிலே உங்களை ரிடையர் பண்ணியிருக்கா. இதிலே துக்கப்படறதுக்கு என்ன இருக்கு? ஏதோ தப்புத் தண்டா பண்ணி வேலையிலிருந்து 'டிஸ்மிஸ்' பண்ணிட்ட மாதிரின்னு நீங்க துக்கப்படறேள்?'' என்றாள்.

''காமாட்சி! இத்தனை நாட்களும் எத்தனை கௌரவமா இருந்தேண்டி? பிள்ளை, பொண்ணு, வேலைக்காரி, ஏன், நீகூடத்தான் என்னை அலட்சியம்பண்ண ஆரம்பிச்சுட்டே!''

''யார் உங்களை அலட்சியம் பண்ணினா? நீங்க இப்ப ரிடையராயிட்டதாலே உங்க காரியங்களை நிதானமாச் செஞ்சுக்கலாமேன்னு சொன்னா, அது ஒரு தப்பா? நீங்க அப்படி நினைக்கிறதுக்கு ஒரு காரணம் இருக்கு. சதா உங்களைப் பத்தி, உங்க உத்தியோகத்தைப் பத்தி, ஆபீஸைப் பத்தியே நினைச்

கண்டிருந்தேனே தவிர நீங்க உங்க குடும்பத்திலே யாரைப் பத்தியாவது நினைச்சிருக்கேளா? காலம்பற விடியறதுக்கு முன் எழுந்து உங்க காரியத்திலேயே கண்ணு யிருப்பேள். அதனுலேதான் இப்ப உங்க ரிடையர் மெண்டை நினைச்சு இப்படித் துக்கம் துக்கமா வரது. உங்களைப் பத்தி நீங்களே குறைவா நினைச்சுண்டு வேதனைப் படறேள்...!''

''ஏண்டி, காமாட்சி! உனக்கு மட்டும் துக்கமா யில்லையா? இது அப்படிச் சுலபமா ஒதுக்கித் தள்ளற விஷயமா?''

''இதிலே துக்கப்படறதுக்கு என்ன இருக்கு? கைநிறையச் சம்பளம் வாங்கி நன்னுச் செல வழிச்சேள். இப்ப பிராவிடெண்ட் பண்டு கிராஜுடி பணம் கணிசமா வந்திருக்கு. ரிடையர் ஆனவாளெல்லாம் உங்க மாதிரி சௌகரியமா ரிடையராகறதில்லே. கடன் பட்டுத் திண்டாடிண்டிருக்கிற சமயத்திலே ரிடையர்மெண்டு உத்தரவு வரும். எங்கப்பா அப்படித்தானே கஷ்டப்பட்டார்! உங்களுக்கு அப்படி இல்லையே! பிள்ளை நல்ல வேலையிலே இருக்கான். மூத்தவள் கல்லூரிப் படிப்பு முடியப் போறது. சின்னவளுக்கும் ஹைஸ்கூல் படிப்பு முடியப் போறது. பிள்ளை, பெண் எல்லோரும் 'ஸ்காலர்ஷிப்' வாங்கிப் படிக்கிற புத்திசாலிகள். சொந்த வீடு இருக்கு. இதுக்கு மேலே கவலைப்படறதுக்கு என்ன இருக்கு...?''

''காமாட்சி, உன் பேச்சைக் கேட்க, கேட்க எனக்கு ஒரே ஆச்சரியமா யிருக்கு. என் துயரத்துக்குக் காரணமே யில்லேன்னு புட்டுப் புட்டு வைச்சுட்டியே. அது இருக்கட்டும். நிஜமாத்தான் கேட்கிறேன். நான் ரிடையர் ஆனதிலே உனக்கு வருத்தமே இல்லையா?''

''எதுக்காக வருத்தப்படறது? காலா காலத்திலே நடக்க வேண்டியதுதானே நடந்திருக்கு. துக்கப்பட வேண்டாததற்கெல்லாம் துக்கப்படறேள். கீதையைத் தினம் பாராயணம் பண்ணினுல் மட்டும் போதாது. நமக்கு ஆண்டவன் இட்ட கட்டளையை நிறைவேத்தறதுக்குத்தான் நாம் இந்தப் பூமியிலே பிறந்திருக்கோம். அவாளவாள் செய்ய வேண்டிய கடமைகளைச் செஞ்சிண்டு ஒழுங்கா யிருந்தால் போதும். மற்றதெல்லாம் பகவான் கிட்ட ஒப்படைச்சுட்டு நிம்மதியா யிருக்கணும். எங்களுக்கெல்லாம் ஏதாவது வந்தா 'டேக் இட் ஈஸி' என்பேளே! உங்க விஷயத்திலே அதை ஏன் கடைப்பிடிக்க மாட்டேங்கறேள்...''

''காமாட்சி! உனக்கு எங்கிருந்து இவ்வளவு ஞானம் வந்தது? போர்க் களத்திலே சோர்ந்து போய் நின்ற அர்ஜுனனுக்கு, கீதோபதேசம் செய்த மாதிரி' எனக்கு ஞானோபதேசம் செய்து நீ உயர்த்துட்டே. ரிடையராகிட்டோமே, இனிமேல் எப்படிப் பொழுதைப் போக்கறதுன்னுட்டுத் தவிச்சுண்டிருந்த எனக்கு எத்தனை வேலை கொடுத்திட்டே!''

ராஜசேகரனுக்குத் தன் உள்ளம் துயரம் நீங்கி மகிழ்ச்சியில் திளைத்தாற் போலிருந்தது.



**சிலேடைச் சிரிப்பு!**

''பாட்டி! எந்த ஊருக்கு டிக்கெட் வேணும்?''
''பாட்டியாலாவுக்கு!''

★

''நம் பஜனைக் கோஷ்டியின் தலைவராகத் திரு ஜே. ஜே. விட்டல் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்!''

★

நாகர்: பிள்ளையாண்டான் படுபயங்கர சைவம். 'முட்டை'கோஸ், 'ஆமை'வடை இதுகளைக் கூடத் தொட மாட்டான்!

★

ஒருவர்: இங்கே இருந்த குண்டுராவும் கோவிந்த ராவும் எங்கே போயிட்டாங்க?
மற்றவர்: ராவோட ராவா எங்கேயோ போயிட் டாங்க!



பிரிட்டனில் ஒரு கன்ஸர்வேட்டிவ் கட்சிக்காரர், ''நான் ஒரு டாக்ஸியில் போகிறேன் என்றால் டாக்ஸி டிரைவரை எக்கச்சக்கமாகப் புகழ்வேன். மீட்டர் காட்டும் பணத்தை விட அதிகமாகக் கொடுத்து, 'கன்ஸர்வேட்டிவ் கட்சிக்கே தயவுசெய்து ஓட்டுப் போடுங்கள்' என்று கேட்டுக் கொள்வேன். அவர் ஓட்டு எனக்கு நிச்சயம்'' என்றார்.

உடனே லேபர் கட்சிக்காரர், ''நான் ஒரு டாக்ஸியில் போகிறேனென்றால், டாக்ஸி டிரைவரைக் கண்டபடி திட்டுவேன். மீட்டர் ஏன் இவ்வளவு பணம் காட்டுகிறது? யாரை ஏமாற்றப் பார்க்கிறாய் என்று கத்துவேன். இறுதியில் 'மரியாதையாகக் கன்ஸர்வேட்டிவ் கட்சிக்கே வோட்டுப் போடு; ஜாக்கிரதை' என்று மிரட்டுவேன். அவர் வோட்டு என் கட்சிக்குத்தான்'' என்றார்.

-சாகா-முத்து

சாதாரண குற்றங்கள், அரசியல் குற்றங்கள் என்ற பாகுபாடு உண்டு. ஒரு பிரயாணி விமானத்தை நாலு துப்பாக்கிக்காரர்கள் கடத்திக் கொண்டு போய்ச் சொந்த லாபத்துக்குப் பயன் படுத்தினால் அது சாதாரண குற்றம். சர்வதேச போலீஸுக்கு வேலையுண்டு. ஆனால் அதே விமானக் கடத்தல்காரர்கள் ஏதோ ஒரு நாட்டின் விடுதலை வீரர்களாக இருந்து கைதிப் பரிவர்த்தனை கோரினால், அது அரசியல் குற்றமாகி விடுகிறது.

அரசியல் குற்றங்களை விசாரிக்க சர்வ தேச போலீஸ் ஸ்தாபனத்துக்கு உரிமை இல்லை. அந்தந்த நாட்டு அதிகாரிகள் பேசி முடிவு செய்து கொள்ள வேண்டிய விஷயம்!

மாக்ஸ்முல்லர் பவனில் திரு அருள் கூறியது.

தகவல்: பட்டினத்தார்

"அரசனால் ஏவப்பட்ட ஊர்க் காவலர்கள் கோவலனைக் கொலை செய்து விட்டார்கள்" என்றுதான் மாதரி கேள்விப்பட்டாள். அதனை அப்படியே சொல்லிவிட்டால் உத்தமக் கற்பினளான கண்ணகி உயிர் விட்டு விடுவாளோ என்று அஞ்சியவளாகி, "குரைகழல் மாக்கள் கொலை குறித்தனரே" என்று அரைகுறையாகச் சொன்னாள். அதைக் கேட்டதுமே கண்ணகி இதயம் பொங்கி எழுந்தாள். எழுந்தவள் காலூன்றி நிற்க முடியாதவளாகி, நிலத்தின் மேல் விழுந்தாள். நிலவைப் பொழியும் திங்களானது வானத்திலிருந்து பெயர்ந்து, கரிய நிறமுடைய மேகக் கூட்டத்துடன் தரை மேல் விழுந்தது போன்று, திங்கள் போல் ஒளி வீசும் முகத்தினையும், மேகம் போல் கறுத்து விரிந்திருந்த கூந்தலையும் உடைய கண்ணகி நிலத்தின் மேல் விழுந்து கிடந்தாள். சிறிது நேரம் மூர்ச்சித்துக் கிடந்தாள். பின்னர் மூர்ச்சை தெளிந்தவளாகி "என் கண்ணாளா! நான் உன்னை எங்கு கண்டு தேடுவேன்? ஐயோ! நான் தேடிக் காண முடியாத இடத்துக்கல்லவா நீ சென்று விட்டாய்!" என்று தன் முகத்தில் அறைந்து கொண்டு விம்மி விம்மி அழுது வேதனைப் பட்டாள்.

கோவலன் மரணச் செய்தியைக் கூறிய மாதரி, அதைக் கேட்டுக் கதறியழும் கண்ணகி

# இலக்கியச் செல்வம்

ம.பொ.சி



பின் கண்ணீரைத் துடைத்தாள் இல்லை; அவளுக்கு ஆறுதல் மொழி கூறவும் அந்த ஆயர் முதுமகள் முயலவில்லை. கண்ணகியை மாதரியிடம் அடைக்கலம் தந்த போது,

"ஆயிழை தனக்குத் தாயும் நீயே
ஆகித் தாங்கு"

என்று அறிவுரை கூறினாள் கவுந்தி. மாதரியும் தாய்மை உணர்வோடுதான் கண்ணகியை அடைக்கலம் பெற்றாள். ஆனால், கள்வனின் மனைவி என்று அவளும் நம்பியதால் கண்ணகியிடம் கொண்ட தாய்ப் பாசத்தைத் துறந்து விட்டாள்!

மாதரியும் ஐயையும் ஆய மகளிரும் தன்னை அணுகி ஆறுதல் வார்த்தை கூறுதது, கண்ணகி நெஞ்சைப் பிளப்பதாக இருந்தது. அவர்களும் தன் கணவனைக் கள்வன் என்றே கருதி விட்டார்கள் என்ற முடிவுக்கு வந்தாள்.

தன் கணவன் கள்வனல்லன் என்பதனை ஆயர் சேரியிலுள்ளவர்கள் அறிய வைப்பதற்கு, கண்ணகிக்குத் துணை புரிய மதுரையில் ஆள் ஏது? அதனால், கதிரவனைச் சாட்சிக்கு அழைக்கலானாள்.

"வாய்வதின் வந்த
குரவையின் வந்தீண்டும்
ஆய மடமகளிர்
எல்லீருங் கேட்டீமின்;
ஆயமட மகளிர்
எல்லீருங் கேட்டைக்க;
பாய்திரை வேலிப்
படுபொருள் நீயறிதி,
காய்கதிர்ச் செல்வனே!
கள்வனோ, என் கணவன்?"

"ஆயர் குலப் பெண்களே! நீங்கள் எல்லோரும் கேளுங்கள்; இந்த ஆயர் குலப் பெண்கள் அறிய, காய் கதிர்ச் செல்வனே! நீயே சொல், என் கணவன் கள்வனா? இந்த உலகில் நீ அறியாதது ஒன்றுமில்லை, நீயே சொல், என் கணவன் கள்வனா?" என்று கூறி, அடிவானத்திலிருந்து உச்சி வானத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் கதிரவனைச் சாட்சிக்கு அழைத்தாள். அந்த நேரத்திலே வானத்திலிருந்து ஒரு குரல் ஒலித்தது.

"கள்வனோ அல்லன்;
கருங்கயற்கண் மாதராய்!
ஒள்ளெரி உண்ணும் இவ்வூர்"

"கரிய விழிகளுடைய கண்ணகி தேவியே! நின் கணவன் கள்வனல்லன். அவனைக் கள்வன் என்ற இவ்வூரைத் தீ உண்ணும்".

இது, கண்ணகியின் சார்பில் கதிரவன் தந்த சாட்சியம். கண்ணகி அதற்கு மேல் ஆயர் சேரியில் தங்கியிருக்க விரும்பாதவளாகி, தன்னிடம் எஞ்சியிருந்த ஒற்றைச் சிலம்பைக் கையிலேந்திப் புறப்பட்டு விட்டாள்!

ஆயர் சேரியை விட்டுப் புறப்பட்டவள், கூந்தலை விரித்த கோலத்துடன் மதுரை நகருக்குள் புகுந்து வீதிகளில் நடக்கலானாள். வீட்டுக்குள்ளிருந்த பெண்களெல்லாம் - வெளியே வந்து கண்ணகியைக் கண்டு, வியப்பும் வேதனையும் அடைந்தனர். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# சிலர் ஒரு சிறந்த ஃபேனை வாங்குவதில் திருப்தி அடைவதில்லை

## அவர் விரும்புவது அனைத்திலும் சிறந்த ஃபேன்–ராலிஃபேன் டீலக்ஸ்

கூடுதல் விலை கொடுத்தாலும், மிகச் சிறந்த ஃபேனையே வாங்கிட நீங்கள் தயாராக இருக்கும்போது, அதில் தனிப்பட்ட சிறப்புகளை எதிர்பார்ப்பதில் தவறில்லை. பொறி இயல் நுணுக்கச் சிறப்போடு உருவாக்கப்படும் ராலிஃபேன் டீலக்ஸ், பல்லாயிரம் மணி நேரம் ஓடிய பின்னும், அதன் செயலாற்றல் சீரான தன்மையோடு திகழ்கிறது.

- நூதன பிளேட் காண்ட்டூர் அமைப்பு பரந்த சுற்றளவிற்குக் குளுமையான காற்றோட்டமளிக்கிறது.
- பிளேடுகள் கச்சிதமாகச் சமனிலைப் படுத்தப் பட்டிருப்பதால், மோட்டார் நெடுங்காலம் உழைக்கிறது.
- எந்தக் கோணத்திலும் ஆட்டங் கொடுக்காமல், சத்தமின்றி இயங்கும்படி ஸ்டாண்ட் சரிநிலைப்படுத்தப்பட்டுள்ளது.
- ஆதார பாகம் எடை குறைந்தது, எனினும் வலுவானது. அத்துடன் வேகத்தைக் கூட்டிக் குறைக்க, எளிதான பியானோ கீ ஸ்விட்ச்.
- தேர்ந்தெடுக்க 5 வண்ணங்கள்.

வேறெந்த ஃபேனும் இத்தகைய சொகுசான சுகம் தருவதில்லை!



# ராலிஃபேன் டீலக்ஸ்

கவர்ச்சி குன்றாமல் காலத்தை வென்று சுழல்வது!

Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு



கட்டாவ் உடையழகர். ரசிக்கும்
வகைபறித்த உல்லாசி. ஆளைப்
பார்த்தாலே தெரியும்: கனின
மான ஒரு நயம். காருக்கான
ஒரு இங்கிதம். கவர்ச்சிக்குக்
களைகட்டுவது கட்டாவ்.
டெக்ரூரா ஷர்ட்டிங் துணிகள்
ஆடவருக்கு. மென்மையிலே
ஒரு மிடுக்கு. அமைதியிலே
ஒரு ஆர்வப் பெருக்கு.
கட்டாவ் கட்டழகிக்கோ—
டெரிகோஸா சேலைகள்.
வாழ்விலே மோகமுடைய
வனிதையருக்குப் பொருத்தம்



# கட்டாவ்

டெக்ரூரா ஷர்ட்டிங் துணிகள்
& உடுப்பணிகள். டெரிகோஸா
'டெரீன்' சேலைகள்

Creative Unit-A 2681